□ ஞானானந்தம் □
9

# தாயா... தாரமா...
# யார் வேண்டும் உங்களுக்கு?



வைரம் ராஜகோபால்

கங்கா - காவேரி
17, காரியாங்குடி செட்டித் தெரு
வெளிப்பாளையம், நாகப்பட்டினம்-611 001

ஸ்ரீ காஞ்சி ஆச்சார்ய ஸ்வாமிகளின்

## வாழ்த்துரை

திரு வைரம் ராஜகோபால் அவர்களால் எழுதப்பட்டு நாகப்பட்டினம் குமரி பதிப்பகத்தாரால் வெளியிடப்பட விருக்கும் ஞானானந்தம் எனும் நூல் ஆஸ்திக வாழ்வினை விரும்புவோர்க்கு அதிக உதவியாக அமைந்து விளங்க ஸர்வேச்வரன் அருள்கிட்ட ஆசீர்வதிக்கிறோம்.



ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளின்

## வாழ்த்துரை

பத்திரிகைத்துறையில் நன்கு முதிர்வடைந்த வைரம் ராஜகோபால் நல்ல நீதி நெறி கருத்துகளை தினமலர் வார இதழில் தொடர்ந்து எழுதி வரும் கட்டுரைகளின் தொகுப்பை 'ஞானானந்தம்' என்ற புத்தகமாக வெளியிடுகிறார்கள். பாலர் முதல் முதியோர் வரை படித்துப் பயனடையும் வகையில் அமைந்துள்ள கட்டுரைகளின் கருத்துகள் வரும் தலைமுறையினருக்கும் பொக்கிஷமென்றால் மிகையாகாது.


விலை: ரூ. 12-00

☐ முதற் பதிப்பு : ஆகஸ்ட், 1994
☐ பதிப்பாளர் : புத்தகப்பித்தன்
☐ அச்சிட்டோர் : ஸ்ரீ பரமேஸ்வரி பிரஸ்
சென்னை-4

★ வைரம் ராஜகோபால் ★

## ஞானானந்தம் நூல் வரிசை

1 தாயில்லாமல் நாம் இல்லை
2 மன அமைதி இல்லையா ?
3 மேலான வாழ்க்கை எது ?
4 மனிதன் வாழவேண்டிய முறை என்ன ?
5 சொல்லித் தெரிவதில்லை !
6 நிறைய சம்பாதிக்க வேண்டுமா ?
7 வாழ்க்கையில் வெற்றி அடைய எது தேவை ?

*கங்கா— காவேரி, நாகப்பட்டினம், 611001*

## 1. தாயா... தாரமா... யார் வேண்டும் உங்களுக்கு?

தர்ம சாஸ்திரம் என்பது ரொம்பவும் சூட்சுமமானது. இது சம்பந்தமான கேள்வியை யாராவது கேட்டால் உடனடியாக பதில் சொல்ல முடியாது. அந்தக் கேள்விக்கு சாஸ்திரப் பிரகாரம் பதில் சொல்லி, அதனால் யாருக்காவது ஏதாவது இடைஞ்சல் ஏற்பட்டால் அந்த பாவம், தர்ம சாஸ்திரம் சொன்னவரையே சேரும். அதனால் விசயம் தெரிந்தவர்கள் இதுபோன்ற சங்கடமான கேள்விகளுக்கு பதில் சொல்ல மாட்டார்கள். தர்ம சாஸ்திரம் தெரிந்த ஒருவரிடம், ஒருவர் வந்தார்.

'சாஸ்திரிகளே! என் மனைவிக்கும் என் தாயாருக்கும் ஒற்றுமை இல்லை. சதா சண்டைதான். நான் என் மனைவியை விட்டு விடலாமா அல்லது தாயாரை விட்டு விடலாமா? யாராவது ஒருவர்தான் என்னோடு இருக்க முடியும். என்ன செய்ய?' என்று கேட்டார். சாஸ்திரிகள் யோசித்தார். இதில் யாரை விட்டு விடலாம் என்று சொன்னாலும் அந்தப் பாவம் இவரைச் சேரும். அதனால், 'ஐயா! இது ரொம்ப பெரிய விசயம். இன்னும் பெரியவர் யாராவது இருந்தால் அவரைக் கேட்டுப் பாருங்கள்,' என்று சொல்லிவிட்டு நழுவினார் அவர்!

கிராமம் ஒன்றில், பெரியவர் ஒருவர் திண்ணையில் உட்கார்ந்து ஜெபம் செய்து கொண்டிருந்தார். அப்போது ஒரு பசுமாடு ஓடி வந்து பக்கத்திலிருந்த சந்து வழியாக ஓடிவிட்டது. சற்று நேரத்துக்கெல்லாம் ஒரு கசாப்புக் கடைக்காரன் இவரிடம் ஓடி வந்து, 'ஐயா! இந்த பக்கமாக ஒரு மாடு ஓடி வந்ததே! அது எந்தப் பக்கம் போயிற்று?' என்று கேட்டான். இவர் யோசித்தார்! 'தெரியாது' என்று

சொன்னால் பொய் சொன்ன பாவம் வரும். எந்தப் பக்கம் போயிற்று என்று சொன்னால் அவன் அந்தப் பக்கம் போய் பசு மாட்டைப் பிடித்து வந்து கொன்று விடுவான். பசுவின் மரணத்துக்குக் காரணமாயிருந்த பாவம் இவரைச் சேரும். என்ன செய்வது என்று யோசித்து விட்டு, கண்ணை மூடிக் கொண்டு ஜெபம் செய்ய ஆரம்பித்துவிட்டார். கசாப்புக் கடைக்காரன் இரண்டு மூன்று தடவை இவரைக் கேட்டுப் பார்த்தான். இவர் பதில் சொல்லாமலே ஜெபம் செய்து கொண்டிருந்தார். 'ஹூம்... கேட்கிறது காதுலே விழலை போலிருக்கிறது,' என்று திட்டிவிட்டுத் திரும்பிப் போய்விட்டான் அவன். அப்பாடா! என்று கண்ணைத் திறந்தார் சாஸ்திரிகள். பொய்யும் சொல்லவில்லை. பசுவையும் காப்பாற்றியாகி விட்டது என்று பெருமூச்சு விட்டார்.

இப்படி சில கேள்விகளுக்கு சாஸ்திரப் பிரகாரம் பதில் சொல்வது சிரமம். தெரியாது என்று சொல்வது பொய் சொன்னதாகும். அதனால், 'யாராவது பெரியோர்களைக் கேட்டுப் பாருங்கள்,' என்று சொல்லி விடுவார்கள். தர்ம சாஸ்திரம் அப்படி சூட்சுமமானது. அரைகுறை ஆள்தான் 'எனக்குத் தெரியும், எனக்குத் தெரியும்,' என்று சொல்லிக் கொண்டிருப்பார்கள்!

## 2. 'அதைச் செய்தேன், இதைச் செய்தேன்,' என்று தம்பட்டம் அடித்துக் கொள்பவரா நீங்கள்?

பிரம்மா யார் யார் தலையில் என்ன எழுதி இருக்கிறாரோ அதைத்தான் தலைவிதி என்பார்கள். அவர் எழுதியதை யாராலும் மாற்றவோ, அழிக்கவோ, திருத்தவோ முடியாது. அவர் எழுதி வைத்தபடிதான்

எதுவும் நடக்கும். இப்படி 'விதி' என்பது ஏற்கனவே நிர்ணயிக்கப்பட்ட விசயம்.

பகவானே ராமனாக வந்தும்கூட வனவாசம் செல்ல வேண்டியிருந்தது. ஏன் என்றால் அதுவும் விதியின் பலன்தான் என்றார்கள். 'விதி முன்னே செல்ல தர்மம் பின் சென்றது' என்று இதைப் பற்றி எழுதியிருக்கிறார்கள். ஆகக்கூடி எல்லாமே விதிப்படிதான் நடக்கும்.

உத்தான பாதனுடைய முதல் மனைவி சுநீதி. இரண்டாவது மனைவி சுருசி. சுநீதியின் பிள்ளை உத்தமன். துருவன் தன் தகப்பனார் மடியில் உட்கார முயன்றபோது, சுருசி அவனைப் பிடித்து கீழே தள்ளினாள். உனக்கு இங்கு உட்காரும் அருகதை கிடையாது. நீ தவம் செய்து பகவானை தரிசித்து, என் வயிற்றில் பிள்ளையாகப் பிறக்க வேண்டும். வரம் பெற்று என் வயிற்றில் பிள்ளையாக பிறந்தால் இங்கு உட்காரலாம் என்று சொல்லி கீழே தள்ளி விட்டாள். பின்னர் துருவன் தன் தாயின் உபதேசம் பெற்று காடு சென்று கடும் தவம் புரிந்தான். பகவானை தரிசனம் செய்து வரங்கள் பெற்று பின்னர் பல்லாண்டு காலம் அரசாட்சி செய்து என்றும் அழிவில்லாத துருவ நட்சத்திரமாக விளங்கினான், விளங்குகிறான் என்பது சரித்திரம்.

நாராயண பட்டத்ரி ஸ்ரீ குருவாயூரப்பன் சந்நிதியில் நாராயணீய கிரந்தம் எழுதினார். இந்த சரித்திரத்தையும் எழுதினார். அவர் கிருஷ்ணனைப் பார்த்து, 'இப்படி நடந்தது நிஜம்தானா?' என்று கேட்க, பகவான், 'ஆமாம்' என்று தலையசைத்தாராம். அப்போது பட்டத்ரி, 'ஏ கோபாலா! அந்த சுருசியானவள் துருவனைப் பிடித்து கீழே தள்ளி உருட்டி விட்டபோது அந்த அரசன் உத்தான பாதன் சுருசியிடம், நீ இப்படி செய்தது தவறு, அவனும் என் பிள்ளைதானே; அதிலும் மூத்த பிள்ளைதானே. அவனுக்கு இங்கு உட்கார உரிமையுண்டு என்று ஏன் சொல்லியிருக்கக் கூடாது? அல்லது சர்வாந்தர்யாமியான

நீ அவனை அப்படி சொல்ல வைத்திருக்கக் கூடாதா?" என்று கேட்டு விட்டார்.

பட்டத்ரி கேட்ட கேள்விக்கு பகவான், 'ஏ பட்டத்ரீ! அதுதான் விதி என்பது. துருவன் சுருசியினால் தள்ளப் பட்டு, கானகம் சென்று தவம் செய்து என் தரிசனம் பெற்று பல வரங்களைப் பெற்று பல்லாண்டு காலம் அரசாட்சி செய்து பின்னர் உலகமெல்லாம் போற்றும்படி யான துருவ நட்சத்திரமாக என்றென்றும் பிரகாசித்துக் கொண்டிருக்க வேண்டும் என்பது அவனது விதி. அந்த விதியை நான் எப்படி மாற்ற முடியும்? விதியின்படிதான் எல்லாமே நடக்கும். அதற்கான சூழ்நிலையை உருவாக்கிக் கொடுப்பதுதான் என் வேலை. ராமன் காட்டுக்குப் போனதும், ராவணன் வதம் செய்யப்பட்டதும், துருவன் காட்டுக்குப் போனதும் எல்லாமே 'விதி'யின் செயல் தான்,' என்றார் பகவான்.

பட்டத்ரியும் மேற்கொண்டு சுலோகம் எழுத ஆரம்பித்தாராம். 'நான் அதைச் செய்தேன், இதைச் செய்தேன், அதைப் புரட்டிபுட்டேன், இதை முடித்து விட்டேன்,' என்று மார்தட்டிக் கொள்ளுவதெல்லாம் வெறும் தற்பெருமைதான். எதுவும் விதிப்படிதான் நடக்கும்!'

## 3. பெற்றோரை, எந்த முதியோர் இல்லத்தில் சேர்ப்பது என்று யோசிக்கிறீர்களா?

**மா**தா, பிதா, குரு, தெய்வம் என்று வரிசைப்படுத்திச் சொல்லி இருக்கிறார்கள். மாதா, பிதாவை வழிபட்டு வந்தாலே போதும். அதுவே பெரிய புண்ணியமாம்.

இப்படி மாதா பிதாவைப் பூஜித்து பணிவிடை செய்பவரை தரிசித்து வணங்கினாலே, இவர்கள் செய்த பாவங்கள் தொலைந்துவிடும் என்று சொல்வார்கள். பக்த விஜயத்தில் 'புண்டரீகன்' என்பவனுடைய சரித்திரத்தில் இது விவரிக்கப்பட்டுள்ளது.

புண்டரீகன் தன் மனைவியின் பேச்சைக் கேட்டுக் கொண்டு தாயார், தகப்பனாரை துன்புறுத்தினான். இவனுடைய தொந்தரவு பொறுக்க முடியாமல் மனம் நொந்து இருவரும் காசிக்கு யாத்திரை செல்லும் கோஷ்டியுடன் சேர்ந்து கொண்டு காசியை நோக்கிச் சென்றார்கள். இது விசயம் மனைவி மூலம் கேள்விப்பட்டவுடன் புண்டரீகனும் ஒரு குதிரை மீது மனைவியுடன் அமர்ந்து தன் பெற்றோருக்கு முன்னால் காசிக்கு அருகில் உள்ள ஒரு ஊரை அடைந்தான். இருட்டி விட்டது. அங்கேயே ஒரு சத்திரத்தில் தங்கினான். பக்கத்தில் ஒரு ஆசிரமம் இருந்தது. விடியற்காலை வேளையில் இவன் விழித்துக் கொண்டு அந்த ஆசிரமத்தை கவனித்தான். அப்போது குரூர ரூபமுள்ள மூன்று பெண்கள் அந்த ஆசிரமத்துக்குள் நுழைவதை கண்டான். சிறிது நேரத்தில் சவுந்தர்ய ரூபமுள்ள மூன்று யுவதிகள் ஆசிரமத்துக்குள் இருந்து வெளியே வருவதைக் கண்டான். இவனுக்கு ஒன்றும் புரியவில்லை. எழுந்து ஓடிச் சென்று அந்தப் பெண்களின் முன் நின்றுகொண்டு, 'அம்மணிகளே! நீங்கள் யார்? இதற்கு முன் உள்ளே சென்ற குரூர ரூபமுள்ள மூன்று பெண்கள் யார்? அவர்கள் எங்கே? இந்த ஆசிரமத்துக்குள் யார் இருக்கிறார்கள்? இங்கு என்ன விசேஷம்?' என்று கேட்டான்.

உடனே அந்தப் பெண்களில் ஒருத்தி, ''ஏ துராத்மா! சற்று விலகி நில்! மகா பாவியான உன் கண்களுக்கு நாங்கள் தெரிந்தது நீ செய்த ஏதோ ஒரு சிறு புண்ணியம் தான் காரணமாக இருக்கும். நான் கங்கை, இவர்கள் யமுனை, சரஸ்வதி. நாங்கள் மூவரும் நதிகளாக

பிரவகித்துக் கொண்டிருக்கிறோம். பாவிகள் தினமும் ஸ்நானம் செய்து தங்களது பாவங்களை எங்களிடம் விட்டுச் செல்கிறார்கள். அந்தப் பாவங்களை நாங்கள் ஏற்றுக் கொள்வதால் நாங்கள் குரூர ரூபம் பெறுகிறோம். பிரதி தினம் விடியற்காலையில் இந்த ஆசிரமத்துக்கு வந்து உள்ளே இருக்கும் புண்ணிய புருசனான தபஸ்வியை நமஸ்காரம், பிரதட்சிணம் செய்து எங்கள் பாவங்களை ஒழித்து மீண்டும் எங்கள் சுய ரூபமான இந்த சவுந்தர்ய ரூபத்தை அடைகிறோம்,'' என்றாள்.

''அப்படியானால் உள்ளே இருப்பவருக்கு உங்கள் பாவங்களை போக்கி சவுந்தர்ய ரூபத்தை அளிக்கும் சக்தி எப்படி கிடைத்தது? அதைச் சொல்ல முடியுமா?'' என்றான் புண்டரீகன். அதற்கு கங்கையானவள், ''உள்ளே இருக்கும் புண்ணிய புருசர், வயதான தன் மாதா பிதாக்களுக்கு காலை முதல் இரவு வரையில் பணி விடை செய்து, அவர்களுக்கு வேளா வேளைக்கு ஆகாரம் அளித்து, அவர்கள் மனம் மகிழும்படி உபசரித்து வந்ததால் மாதா பிதாவை வழிபட்டதால் இவரும் புண்ணியசாலி யாக இருக்கிறார். இவரை தரிசனம் செய்து வணங்கி னாலே ஒருவர் செய்த சகல பாவங்களும் தொலைந்து விடும்; நேரமாகிறது. நாங்கள் போக வேண்டும்,'' என்று சொல்லி மூவரும் போய் விட்டார்கள்.

புண்டரீகனது மனதில் மின்னல் போல் ஒரு நல்ல எண்ணம் தோன்றியது. ''ஆகா! மாதா, பிதாக்களுக்குப் பணிவிடை செய்வதே பெரிய புண்ணியம் என்றார்களே! நாம் இது தெரியாமல் ஏமாந்து விட்டோமே! மனைவியின் அகம்பாவமான பேச்சைக் கேட்டு மாதா பிதாவை உதாசீனம் செய்து விட்டோமே,'' என்று பதறினான். உடன் குதிரை மீது ஏறிக் கொண்டு திரும்ப சென்றான். வழியில் மாதா பிதாவை பஜனை கோஷ்டியில் கண்டான். (மனைவியுடன்தான்!) அவர்கள் காலில் விழுந்து வணங்கி மன்னிப்பு கேட்டான். தாய், தந்தையர் மனம் மகிழ்ந் தார்கள்.

பின்னர் இவன் அவர்களை அழைத்துக் கொண்டு பண்டரிபுரத்தில் வீட்டில் வைத்து பிரதிதினம் அவர்களை மனமாற உபசரித்து பணிவிடைகள் செய்து வந்தான்.

பாண்டுரங்கனே இவன் வீட்டு வாசலில் வந்து நின்று கொண்டு, ''புண்டரீகா! நான் பாண்டுரங்கன் வந்திருக்கிறேன்.'' என்று குரல் கொடுத்தபோது, ''நான் இப்போது என் மாதா பிதாவுக்குப் பணிவிடை செய்து கொண்டிருக்கிறேன். இதை முடித்துக் கொண்டு நான் வரும் வரையில் இந்த செங்கல் மீது நின்று கொண்டிரு'' என்று சொல்லி ஒரு செங்கல்லை எடுத்து வாசலில் போட்டான். பாண்டுரங்கனும் அந்த ஒற்றைச் செங்கல் மீது நின்று கொண்டிருந்துவிட்டு, பிறகு புண்டரீகனுக்கு அனுக்கிரகம் செய்தார் என்பது கதை!

''இந்த கதைதான் எங்களுக்குத் தெரியுமே!'' என்று சொல்கிறீர்களா? தெரியும்தான். மற்ற வழிபாடுகளை விட மாதா பிதாவை வழிபடுவதே பெரிய புண்ணியத்தை அளிக்கக் கூடியது என்பதுதான் இங்கு கவனிக்க வேண்டிய விசயம். மாதா பிதாக்களுக்கு வயோதிகம் வந்து விட்டால் அவர்களை ஏதாவது ஒரு 'முதியோர் இல்லத்தில் சேர்த்துவிட்டு மாதா மாதம் ஏதாவது பணம் கட்டி விட்டால் அங்கேயே இவர்கள் சாப்பிட்டுக் கொண்டு காலத்தைக் கழித்துவிடட்டும்,' என்று சிலர் நினைப்பது நல்லதல்ல! பிடுங்கல் இல்லாமல் தான் மட்டும் மனைவி குழந்தைகளோடு நிம்மதியாக இருக்கலாம் என்று எண்ணுவதும் தவறு. நமக்கும் வயோதிகம் வருமே! அப்போது நம் பிள்ளைகள் நம்மை முதியோர் இல்லத்தில் கொண்டு போய் விட்டுவிட்டால் என்ன செய்வது? என்ற உணர்வு வேண்டும். 'பெற்றோர்களை வயோதிக காலத்தில் ஆதரிப்பதற்குதான் பிள்ளை!' இது ஞாபகத்தில் இருந்தால் போதும்!

## 4. அசுரர்கள் போட்ட லிஸ்ட் பற்றி தெரியுமா உங்களுக்கு ?

பகவான் கருணாமூர்த்தி. அவனுக்கு கருணாகரன் என்ற ஒரு பெயர் கூட உண்டு. ஒரு பக்தனிடம் கருணை ஏற்பட்டு விட்டால் ஒரு நொடியில் அவனுக்கு அருள் கிடைத்துவிடும். இந்தக் கருணை வாயுவேகம், மனோ வேகம் என்பதை விட அதிவேகமானதாகும் கருணைக் கடல் என்பார்கள் பகவானை. அந்தக் கருணை என்பது குறையவே குறையாது. கருணை வெள்ளம் என்பார்களே அதுபோல அது பிரவாகமாக வரும். ஆனால், அவனுக்கு அந்தக் கருணை ஏற்பட வேண்டுமே! அதற்கு என்ன செய்வது?

பகவான் என்ன சொல்கிறார் என்றால் என்னையே சதாகாலமும் நினைத்துக் கொண்டிருப்பவனுக்கு அருள் செய்து மோட்சத்தை அளிக்கிறேன். அவன் எந்த விதமாகவாவது என்னையே நினைத்துக்கொண்டிருந்தால் போதும். பக்தி பாவத்துடன் என்னையே நினைத்துக் கொண்டிருக்கலாம். பயத்தினாலும் என்னையே நினைத்துக் கொண்டிருக்கலாம். விரோத மனப்பான்மை யுடனும் என்னையே நினைத்துக் கொண்டிருக்கலாம். எப்படி இருந்தாலும் அவனுக்கு என் ஞாபகம் இருந்து கொண்டிருந்தால் போதும் என்கிறார்.

துருவன், பிரகலாதன் போன்றவர்கள் பக்தியினால் பகவானை எப்போதும் நினைத்துக் கொண்டிருந்து அருள் பெற்றவர்கள். பயத்தினால் பகவானையே நினைத்துக் கொண்டிருந்தான் கம்சன். இப்போ வந்து விடுவானோ, எப்போ வருவானோ என்று பயந்து

பயந்து பகவானையே நினைத்துக் கொண்டிருந்ததால் பகவானால் வதம் செய்யப்பட்டு நற்கதியடைந்தான். சிசுபாலன், சதாகாலமும் கிருஷ்ணனையே நினைத்துக் கொண்டு தினமும் கிருஷ்ணனை திட்டிக் கொண்டே யிருந்தான். பகவானால் வதம் செய்யப்பட்டு பகவானை அடைந்தான். இரண்யன், 'எங்கே அந்த நாராயணன், எங்கே அந்த நாராயணன், அவனை வெட்டி அதம் செய்து விடுகிறேன்' என்று விரோத மனப்பான்மையுடன் பகவானின் ஞாபகமாகவே இருந்தான். பகவானால் வதம் செய்யப்பட்டு நற்கதி பெற்றான். எப்படி அசுரர்கள் கூட பகவானையே நினைத்துக் கொண்டிருந்த தால் நற்கதி பெற்றார்கள்.

இந்த அசுரர்கள் என்பவர்கள் பிரம்மாவைக் குறித்தும் பரமேஸ்வரனைக் குறித்தும் அகோரமான தபஸ் செய்து வரம் பெற்றவர்கள். இவர்களைப் போல் ஆயிரம் வருசம் இரண்டாயிரம் வருசம் என்று அகோரமான தபஸ் செய்வது மற்றவர்களால் முடியாது. ஆனாலும் இவர்கள் கேட்கும் வரம் லோப கோப காரணத்துக்காக இருக்காது. தாங்களே சகல உலகங்களையும் ஆள வேண்டும் என்ற மனப்பான்மையோடுதான் தவம் புரிவார்கள். தவம் செய்தவனுக்கு வரம் கொடுக்க வேண்டும் என்பது நியதி. அதனால் இவர்கள் கேட்கும் வரங்களை பிரம்மாவும் கொடுத்து விட்டு முழிப்பார். பிறகு நாராயணனோ, பரமேஸ்வரனோதான் இதற்கு நிவர்த்தி செய்ய வெண்டி வரும்.

பக்தி மார்க்கத்தில் உள்ளவர்கள் தவம் செய்து பகவானை நேரில் தரிசிக்கும் போது, பகவான், உனக்கு என்ன வரம் வேண்டும் என்று கேட்டால், 'அப்பனே! உன்னை தரிசித்த பிறகு எனக்கு வேறு என்ன வேண்டும். உன் திருவடியை அடைந்து திருவடிக்கு சேவை செய்து கொண்டிருந்தாலே போதும். அந்த வரம் கொடு

போதும்,' என்பார்கள். அதேபோல் வரம் பெற்று ஆயாசமின்றி பகவானை அடைவார்கள். ஆனால் ராவணன், இரண்யன் போன்ற அசுரர்கள், 'எல்லாருக்கும் நான் அதிபதியாக இருக்க வேண்டும்; எனக்கு இன்ன இன்ன வகைகளால் மரணம் ஏற்படக் கூடாது,' என்றெல்லாம் 'லிஸ்ட்' போட்டு வரம் வாங்கினார்கள். என்னதான் 'லிஸ்ட்' போட்டு வரம் வாங்கினாலும் அதில் ஏதாவது ஒன்று விட்டுப் போயிருக்கும். அதை வைத்து பகவான் அவர்களை வதம் செய்திருக்கிறார். அசுரர்கள் தவம் செய்த புண்ணியத்தால், பகவானால் வதம் செய்யப்பட்டாலும் கூட பகவானை அடைந்து விடுகிறார்கள். பக்தர்களுக்கு சுலபமாகவே பகவானை அடைய முடிகிறது. வரம் பெற்ற ஆணவத்தினால் வதம் செய்யப்பட்டு பகவானை அடைந்தவர்கள் பலர். பக்தி செய்தே பகவானை அடைந்தவர்கள் பலர். ஆகக் கூடி பக்தி செய்தோ, விரோதம் பாராட்டியோ, நிந்தை செய்தோ எப்படியாயினும் பகவானுடைய ஞாபகம் இருந்து கொண்டே இருந்தால் போதும். அவனை அடையலாம் என்கிறார்கள். எல்லாவற்றிலும் சுலபமான வழி 'நாம சங்கீர்த்தனம்' என்றார்கள். நாம சங்கீர்த்தனம் என்றால் ஏதோ பாட்டு பாடி கச்சேரி செய்ய வேண்டுமென்பதல்ல. சதா காலமும் தெய்வ நாமாவை சொல்லிக் கொண்டிருந்தால் போதும் என்றார்கள். சுலபம் தானே! முடியுமா பாருங்களேன்!

●

## 5. 'உன்னோடு இனி குடும்பம் நடத்த முடியாது,' என்று சொல்கிறாரா உங்கள் கணவர்?

சில குடும்பம் அமைதியாகவும், சில குடும்பம் சண்டை சச்சரவுகளுடனும் இருக்கும். கணவன் மனைவிக்குள் தகராறு! 'சீ... சீ... உன்னோடு இனிமேல் குடும்பம் நடத்த முடியாது! நான் சன்யாசம் வாங்கிக் கொண்டு போய் விடுகிறேன்,' என்பான் கணவன். 'பேஷா போங்களேன். போறதானால் சமையல் ஆவதற்குள் போங்கோ. ஒரு ஆள் சாப்பாட்டை குறைத்து சமைக்கலாம்' என்பாள் அவள். இவனுக்கு ரோஷம் வந்துவிடும். வேகமாய் போய் ஈசி சேரில் உட்கார்ந்து கொண்டு நாவல் படித்துக் கொண்டிருப்பான். 'மணி பதினொண்ணு ஆச்சே! பசிக்கலையா? சாப்பிட வர்றதுதானே,' என்பாள் மனைவி. 'ஓ! பதினொண்ணு ஆயிடுத்தா! இதோ வந்துடறேன்,' என்று ஓடி வந்து சாப்பிட உட்காருவான் கணவன். சண்டையெல்லாம் காற்றோடு போயிற்று!

சன்யாசம் வாங்கிக் கொள்வது என்றால் ஏதோ கடையில் போய் வாழைப்பழம் வாங்குகிற மாதிரியா? அது ரொம்பவும் சிரமம். தலையை மொட்டை போட்டுக் கொண்டு காவி கட்டிக் கொண்டால் சன்னியாசியாகி விட முடியாது.

ஒரு சத்குரு ஒரு நல்ல சீடனை தேர்ந்தெடுத்து அவனை பரீட்சை செய்து பார்த்த பின்னர்தான் தீட்சை வழங்குவார். பாதியிலேயே சம்சாரத்துக்கு ஓடுகிறவனை தேர்ந்தெடுக்க மாட்டார். சீடனும் குருவுக்கு பணிவிடை

செய்து ஞானம் பெற்று சன்னியாசியாக திகழ்வார். ஒரு சின்ன கதை!

ஒரு மலை உச்சியில் ஒரு சாது தவம் செய்து கொண்டிருந்தார். சன்னியாசம் மேற்கொள்ள விரும்பிய ஒருவன் அங்கு வந்து சேர்ந்தான். அவரை தரிசித்த உடனே இவரே என் குரு என்று தீர்மானித்தான். அந்த சாது எப்போதோ ஒருநாள் ஒரு சில நிமிட நேரமே தன் சமாதி நிலையிலிருந்து விழித்து வெளியே வருவார். இவரது தரிசனத்துக்காக நிற்கும் ஒரு சிலரை கண்களால் பார்த்து விட்டு உள்ளே போய் தவத்தில் ஆழ்ந்துவிடுவார். இரவு பகல் எதுவும் அவருக்குத் தெரியாது. குடிசைக்கு வெளியில் ஒரு சுரக் குடுக்கை. பக்தர்கள் அதில் ஏதாவது பழங்களைப் போட்டு விட்டுச் செல்வார்கள். என்றாவது ஒருநாள் இந்த சாது வெளியில் வந்தால் அந்தப் பழங்களில் சிறிதளவு சாப்பிட்டுவிட்டு உள்ளே போய் விடுவார். பக்தர்கள் அவர் சாப்பிட்ட மிச்சத்தை பிரசாதமாக எடுத்துச் சாப்பிடுவார்கள். இந்த சாதுவைப் பற்றி கேள்விப்பட்ட அந்த இளைஞன் இவரையே குருவாக அடைய வேண்டி அந்த வாசலிலேயே நாள் கணக்கில் காத்து நின்றான்.

ஒருநாள் அந்த சாது சமாதி நிலை கலைந்து வெளியே வந்தார். அங்கு நின்ற இளைஞனை கண்டார். 'யார் நீ? ஏன் இங்கு வந்தாய்,' என்று கடிந்து கொண்டு அவன் மீது கல்லையும் மண்ணையும் வீசி எறிந்தார். இளைஞன் திட சங்கல்பத்துடன், 'தாங்களே என் குருநாதர். எனக்கு சன்னியாசம் வழங்க வேண்டும்,' என்று சொல்லி கீழே விழுந்து வணங்கினான்.

சாது பார்த்தார். அவனை தூக்கி நிறுத்தி, 'நான் உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். உன் திட வைராக்கியத்தை கண்டு மகிழ்ந்தேன். உனக்கு தீட்சை அளிக்கிறேன்,' என்று சொல்லி அவனுக்கு

சன்னியாசம் வழங்கி உபதேசமும் செய்து தீட்சா நாமமும் வழங்கினார்.

ஆகவே, குடும்பத்தில் சிறு தகராறு என்றால் உடனே, 'நான் சன்னியாசம் வாங்கிக் கொண்டு விடுவேன்' என்று பயமுறுத்துபவர்களைக் கண்டு பயப்பட வேண்டாம். அப்படி கோபித்துக் கொண்டு போகிறவர் வாசல் திண்ணையில்தான் உட்கார்ந்திருப்பார். அல்லது வெளியே போனாலும் சாயந்திரம் திரும்பி வந்துவிடுவார். வரும்போது ராத்திரி சமையலுக்கு வேண்டிய காய்கறிகளையும் வாங்கிக் கொண்டுதான் வருவார். குடும்பத்தை விட்டு விட்டு சன்னியாசியாகப் போவது அவ்வளவு சுலபமா— மனசுதான் வருமா? எங்கேயோ லட்சத்தில் கோடியில் ஒருவரால்தான் முடியும். மற்றவர்கள் பேச்சோடு சரி! சும்மா 'டுப்' விடுவார்கள்!

●

## 6. புத்திசாலி குழந்தை வேண்டுமா உங்களுக்கு?

மகான்கள் ஆசிர்வாதம் செய்யும் போது, ''குடும்ப விருத்தியும், தன தான்ய விருத்தியும்...'' என்று ஆசிர்வாதம் செய்வது வழக்கம். குடும்ப விருத்தி என்றால் குழந்தைகள் ஏற்படட்டும் என்பது. இவர்களை ரட்சிக்க தனம், தான்யம் எல்லாம் தேவை. அதனால் அதையும் சேர்த்துச் சொல்வது வழக்கம். இன்னும் என்னவெல்லாமோ சேர்த்துச் சொல்வார்கள். அதெல்லாம் இப்போது வேண்டாம் ஒரு குடும்பம் என்றால் அந்த குடும்பத்தில் ஒரு குழந்தை இருந்தால்தான் அழகு. நல்லது. சந்ததி விருத்தி என்பது மிக முக்கியம்.

சில குடும்பத்தில் நிறைய குழந்தைகள் இருக்கும். எனக்கு நாலு பிள்ளைகள், ஆறு பெண்கள்! எல்லாருக்கும் கல்யாணமாகி விட்டது. ரெண்டு பெண் அமெரிக்காவில் இருக்கிறாள். இரண்டு பெண் துபாயில் இருக்கிறார்கள். ஒருத்தி பம்பாயில், ஒருத்தி பெங்களூரில். பிள்ளைகள் ஒவ்வொருவரும் டில்லி, பம்பாய், கல்கத்தா, ஜலந்தரில் இருக்கிறார்கள் என்று பெருமையாகச் சொல்வார்கள். அவர்கள் மாதா மாதம் பணம் அனுப்பி விடுவார்கள். நாங்கள் அதை வைத்துக் கொண்டு இந்த சின்ன ப்ளாட்டில் இருக்கிறோம். அவர்களை எப்போதாவது தான் பார்க்க முடிகிறது என்பார்கள். நாலு + ஆறு = மொத்தம் பத்து குழந்தைகளைப் பெற்றாலும் பக்கத்தில் இருந்து கவனிக்க ஒருவர்கூட இல்லை!

சில குடும்பத்தில் ஒரே ஒரு பிள்ளையாகவும் இருக்கும். அதுவும் நல்ல பிள்ளையானால் இவர்களோடு கூடவே இருந்து ஆதரிக்கும். இதற்கும் ப்ராப்தம், புண்ணியம்தான் காரணம். பிள்ளைகள் ஒனறாக இருந்தாலும் பலவாக இருந்தாலும் அது நல்ல பிள்ளை யாக இருக்க வேண்டும். ஊர் வம்பை விலைக்கோ, இலவசமாகவோ வாங்கி வராமல் இருக்க வேண்டும். இப்படியெல்லாம் அமைய வேண்டும் அப்படி அமைந்தால் பெற்றவருக்கும் பெருமை, பிள்ளைகளுக்கும் பெருமை.

நல்ல பிள்ளையானால், ''உங்க பையனா சார்?'' என்று சந்தோசயாக பலர் கேட்பார்கள். அடாவடிப் பையனாக இருந்தால், 'ஜாமீன்' கொடுத்து அழைதது வர வேண்டியிருக்கும்!

மிருகண்டு முனிவர் குழந்தை வேண்டுமென்று தவம் செய்தார். பரமேஸ்வரன் தோனறி 'நூறு வயதுடைய அசடான பிள்ளை வேண்டுமா, பதினாறு வயதுடைய சத்புத்திரன் வேண்டுமா?'' என்று கேட்டார். அவர் புத்திசாலி. அசடான பிள்ளை வேண்டாம். பதினாறு

வயதுடைய நல்ல பிள்ளையே போதும் என்றார். மார்க்கண்டேயனைப் பெற்றார். (இந்தக் கதைதான் உங்களுக்குத் தெரியுமே!) இதேபோல் சிவகுரு—ஆர்யாம்பாள் வடக்குநாதரை வேண்டினாள். இங்கேயும் பதினாறு வயதுடைய நல்ல பிள்ளையே போதும். நூறு வயதுடைய அசட்டுப் பிள்ளை வேண்டாம் என்றார்கள். ஆதிசங்கரர் இவர்களுடைய பிள்ளையாகப் பிறந்தார்.

தசரதன் ஏற்கனவே புண்ணியசாலி. இருப்பினும் அசுவமேதம், புத்திரகாமேஷ்டி யாகம் செய்தான். பகவானே பிள்ளையாகப் பிறந்தான். பகவான் ராவண வதத்துக்காக, மனிதனாக அவதாரம் செய்ய வேண்டி, 'நாராயணனே பிள்ளையாக வரவேண்டுமானால் அதற்குத் தகுந்த புண்ணியம் செய்தவன் யார்?' என்று பார்த்தான். ஒவ்வொரு தொகுதியாகப் பார்த்துக் கொண்டே வரும்போது அயோத்தி சக்கரவர்த்தி தசரதன் தான் மகா புண்ணியசாலி என்று தெரிந்தது. தசரதனுக்குப் பிள்ளையாக அவதரித்தான். பல மகான்களின் சரித்திரத்தைப் பார்த்தாலும் தெரியும். அவர்கள் எல்லாரும் புண்ணியசாலிகளான தம்பதிகளுக்குத்தான் புத்திரனாகப் பிறந்தவர்கள் என்பதைக் காணலாம். எப்படியோ இருக்கட்டும். புண்ணியம் இருந்தால்தான் நல்ல பிள்ளை பிறக்கும். இல்லாவிட்டால் ஏனோதானோ என்ற பிள்ளைதான்! ஜாக்கிரதை!

●

# 7. மனதில் நினைத்ததை எல்லாம் வெளியில் சொல்ல முடியாமல் தவிக்கிறீர்களா?

'கலைவாணி' என்றால் சகல கலைகளுக்கும் ஆதாரமானவள் என்பார்கள். இவளை 'சரஸ்வதி' தேவி என்று வழிபடுகிறார்கள். சகல வித்தைக்கும் சரஸ்வதியை வழிபடுகிறார்கள். சரஸ்வதியை வழிபட்டால் சகல வித்யா ஞானமும் ஏற்பட்டு பாண்டித்யம் பெறலாம். இப்படிப் பாண்டித்யம் பெற்றால் மட்டும் போதுமா? தான் கற்ற வித்தையை சாஸ்திரங்களை எடுத்துச் சொல்ல சாமர்த்தியம் வேண்டுமே! அதற்கு 'வாக்கு தேவதை'யின் அருளும் வேண்டும். ஒருவர் நிறைய படித்திருப்பார். அதைச் சொல்ல வராது. படித்து மனதில் உள்ளதை மடமடவென்று சொல்லவோ பேசவோ வராது. இதற்கு என்ன செய்வது. வாக்கு தேவியின் அருள் இருந்தால்தான் முடியும்.

கும்பகர்ணன் கடும் தவம் செய்தான். பிரம்ம தேவன் தோன்றி என்ன வரம் வேண்டுமென்றார். சரஸ்வதி அவன் மனதில் புகுந்தாள். 'நித்யத்வம்' வேண்டுமென்று கேட்க வாயைத் திறந்தான். வாக் தேவி விளையாடினாள். 'நித்ரைத்வம்' வேண்டுமென்று சொல்லி விட்டான். கும்பகர்ணன் விசயம்தான் உங்களுக்குத் தெரியுமே! வாசலில் வரும் குடுகுடுப்பைக்காரன் (நீங்களும் பார்த்திருப்பீர்களே!) ''நல்ல வாக்கு சொல்லடி மாரியாயி... டுர்... ர்... ர்... டுர்... ர்...'' என்று குடுகுடுப்பையை அடிக்கிறான். சொல்வதெல்லாம் நல்ல வாக்காக இருக்க வேண்டுமென்பார்கள். (சிலருக்கு நல்ல வார்த்தையே வாக்கில் வராது. அது வேறு விசயம்!) சித்தம், சொல்,

செயல் எல்லாமே நல்லதாக இருக்க வேண்டுமென்பர் பெரியோர்.

சரஸ்வதியின் அருளால் காளிதாசனும், காளமேகமும், கம்பரும் கவிபாடினார்கள். வாக்கு தேவியின் அருளால் அது நாவிலிருந்து மடைதிறந்தாற்போல் வெளிப்பட்டது.

ஒருவர் மற்றவரை பார்த்து, "ஏன் சார்! வித்யை, கல்விக்கு சரஸ்வதி தேவியை வழிபட வேண்டும் என்று சொல்கிறீர்களே! மேல்நாட்டில் சரஸ்வதி வழிபாடு இல்லாமலே பல அறிஞர்களும், விஞ்ஞானிகளும் தோன்றி யிருக்கிறார்களே! அது எப்படி?" என்று கேட்டார். ஏதோ சாமர்த்தியமாக கேட்டு விட்டதாக எண்ணம். அதற்கு இவர் பதில் கேட்டார்: 'ஆமாம் சார்! அந்த அறிஞர்களும், விஞ்ஞானிகளும் எதைக் கொண்டு இந்த அறிவைப் பெற்றார்கள்?' என்று கேட்டார்.

"அதுவா? பல புஸ்தகங்களைப் படித்து இந்த அறிவைப் பெற்றார்கள்" என்றார் அவர்.

"புஸ்தகத்தை படித்துதானே அறிவு வளர்ச்சி பெற்றார்கள். பிறந்த உடனே அறிவு வந்து விடவில்லை யல்லவா?" என்றார் இவர்.

"ஆமாம் சார். புஸ்தகத்தைப் படித்துதான் அறிவு பெற்றார்கள். சரஸ்வதி பூஜை செய்து வழிபடவில்லை" என்றார் அவர்.

"ரொம்ப சரி! 'புஸ்தகத்தில் சரஸ்வதி வாசம் செய்கிறாள்,' என்பது சாஸ்திரம். 'புஸ்தகத்துள் உறை மாதே,' என்று சரஸ்வதியை சொல்வதுண்டு. அதனால் அந்த புஸ்த்கத்திலும் சரஸ்வதி வாசம் செய்கிறாள். அதை கையில் வைத்துக் கொண்டு படித்தாலும் அந்த சரஸ்வதியை வழிபடுவதாகத்தான் கொள்ள வேண்டும். புஸ்தகத்தை எடுத்ததுமே சரஸ்வதியின் அருள் கிடைத்து விடுகிறது. அறிஞனாகவும், விஞ்ஞானியாகவும் ஆகிறான்" என்றார் இவர்.

அவரால் பதில் சொல்ல முடியவில்லை. ஓகோ! என்று சொல்லிவிட்டு ஓடிவிட்டார். ஆக, சரஸ்வதி தேவி, வாக்கு தேவி இருவருடைய அருளும் இருந்தால் தான் நல்ல புலமையும் வாக்கு சாதுரியமும் ஏற்படும். இப்படியாக ஒரு பெரியவர் சொன்னார். நீங்களும் யோசித்துப் பாருங்களேன்.

## 8. மனைவியின் சமையலில் குறை ஏதும் உண்டா உங்களுக்கு?

'நாவை அடக்கு' என்றார்கள். அதாவது நாக்கை கட்டுப்படுத்தி வை. அதன் இஷ்டத்துக்கு விட்டு விடாதே என்றார்கள். இதில் இரண்டு விதம் உண்டு. இந்த நாக்குதான் ஒருவரோடு ஒருவர் நட்பு கொள்ளவும் உதவு கிறது. ஒருவரோடு ஒருவர் மனஸ்தாபப்படவும் உதவு கிறது.

'நயம்பட உரை' என்றாள் மூதாட்டி. எதையும் நயமாகச் சொல்வது நல்லது. காரிய சாதகத்துக்கும் உதவும். அதையே கொஞ்சம் அதிகார தோரணையில் சொன்னால் காரியம் கெட்டுவிடும்.

ஒரு கிழவர் ஒரு சிறுவனை பார்த்து, "கொழந்தே! நீ கடைத்தெரு பக்கம் போற போது ஒரு பொடி மட்டை வாங்கிண்டு வரியா?" என்று நயமாகக் கேட்டால், "ஓ! இப்பவே போய் வாங்கிண்டு வரேனே! காசு கொடுங்கோ தாத்தா," என்பான். இதையே, "டேய் பயலே! கடைத் தெருவுக்குப் போய் ஒரு பொடி மட்டை வாங்கிண்டு வாடா," என்று அதிகாரம் செய்தால், "போ... போ...

நான் பரீட்சைக்கு படிக்கணும். இப்போ என்னால கடைக்குப் போக முடியாது,'' என்று பளிச்சென்று சொல்லிவிட்டு (கிரிக்கெட் ஆட) போய் விடுவான்.

அதுமட்டுமல்ல. எவ்வளவு கோப தாபம் இருந்தாலும் வார்த்தைகளை அளந்து பேச வேண்டும். பேசுவது என்பதும் இந்த நாக்குதான். யாரையாவது கடுமையாகப் பேசிவிட்டால் அதுவே வீண் விரோதமாகி விடுகிறது. 'நா காக்க' என்றார்கள். நாக்கின் மூலமாகத்தான் எழுத்துக்களும், சொல்லும் வெளிப்படுகிறது. இந்த எழுத்தும் சொல்லும் சுத்தமாகவும் தெளிவாகவும் இருக்க வேண்டும். எதைப் பேசினாலும் நிதானமாகவும் பொறுப்போடும் பேசவேண்டும்.

ஒரே விசயத்தைப் பற்றி நீண்ட நேரம் பேசினாலும் கேட்பவர்கள் கொட்டாவி விடுவார்கள். ரொம்பவும் சுருக்கி விட்டாலும், ''இவர் என்ன சொன்னாரென்றே புரியவில்லையே,'' என்பார்கள். அதனால் அளவறிந்து பேசவேண்டும் என்றார்கள்.

ஆஞ்சநேயன் ராமனிடம் பேச ஆரம்பித்தாராம். ராமன் குறுக்கே எதுவும் பேசவே இல்லையாம். ஆஞ்சநேயன் ராமனைப் பார்த்து, ''தாங்கள் எதுவுமே பேசவில்லையே! நான் பேசியதில் ஏதாவது குற்றம் குறை உள்ளதா?'' என்று கேட்டாராம். அதற்கு ராமன், ''ஆஞ்சநேயா! உன் பேச்சு அமிர்தப்ரவாகம் போலிருந்தது. அதில் நான் மூழ்கி ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டிருந்தேன். அதனால் நடுவில் குறுக்கிட்டு அந்த ஆனந்தத்தை கெடுத்துக் கொள்ள விரும்பவில்லை'' என்றாராம். ஆஞ்சநேயர் நவ வியாகரண பண்டிதர் சூரியனிடமிருந்தே சகல சாஸ்திரங்களையும் கற்றவர். அவர் பேசுவதைப் பற்றிச் சொல்ல வேண்டுமா!

நாவை அடக்கு என்பதை மற்றொன்றுக்கும் கூறலாம். டாக்டரிடம் போனதும் 'நாக்கை நீட்டு' என்கிறார்.

நாக்கைப் பார்த்ததும் வியாதியை கண்டுபிடிக்கிறார். இந்த நாக்குதான் பஜ்ஜியை கொண்டு வா. பக்கோடாவை கொண்டு வா. மசால் வடையை கொண்டு வா என்று சொல்லி உள்ளே தள்ளுகிறது. அதற்குப் பின், "ஐயோ, வயிற்றை வலிக்கிறதே, பேதியாகிறதே," என்று கூப்பாடு போடுவதும் இந்த நாக்குதான். கணவன் மனைவி சண்டைக்கும் இந்த நாக்குதான் ஒரு காரணம். "இது என்ன சாம்பார்? உப்புமில்லே, உரைப்புமில்லே. இதை யார் சாப்பிடறது? நாய் கூட சாப்பிடாது," என்பான். அவளும் பதிலுக்கு, "எனக்குத் தெரிந்தது அவ்வளவுதான். இஷ்டமில்லா விட்டால் ஓட்டல்லே போய் ருசியா சாப்பிடுங்கோ" என்பாள். அவ்வளவுதான் இவன் அடங்கி விடுவான். சரி! சரி! இன்னும் கொஞ்சம் சாம்பார் போடு என்பான். இதற்கெல்லாம் காரணம் நாக்குதானே. அதனால் 'நாவை அடக்கு' புரிகிறதா?

## 9. உலகில் உள்ள மொத்த ஜீவராசி வகைகளின் எண்ணிக்கை தெரியுமா?

இந்த உலகத்தில் என்பத்து நான்கு லட்சம் வகை ஜீவராசிகள் உள்ளன என்று சொன்னார்கள். இவ்வளவு ஜீவ ராசிகளும் இந்த பூவுலகில் எதற்காக ஜென்மம் எடுத்துள்ளது? கர்ம வினையை அனுபவிக்கவே ஜென்மா ஏற்பட்டது என்றார்கள். பூர்வத்தில் புண்ணியமோ, பாவமோ செய்திருந்தால் அதன் பலனை அனுபவிக்க இந்த ஜென்மா ஏற்படுகிறது. பூர்வ ஜென்மாவில் புண்ணியம் செய்தவன் இந்த ஜென்மாவில் சுகமாக வாழ்ந்து விட்டுப் போகிறான். பாவம் செய்தவனும்

பிறந்து பாவத்துக்கான துன்பங்களை அனுபவித்து வீட்டுச் செல்கிறான். ஆனாலும், இங்கு ஒன்று கவனிக்க வேண்டும். புண்ணியமோ, பாவமோ செய்தவன் இங்கு ஜென்மா எடுத்து சுகமோ துக்கமோ அனுபவிக்கிறான். அதே சமயம் இந்த ஜென்மாவிலும் ஏதாவது புண்ணியமோ, பாவமோ செய்யாமல் இருக்கிறானா? என்றால் அதுதான் இல்லை. அவனவன் புத்திக்கு தகுந்தபடி எதையாவது செய்கிறான். அதன் பலனை அனுபவிக்க மீண்டும் பிறவி! இப்படிப் போவதும் வருவதுமாக இருப்பது தானே வேலை! அது சரி! இதற்கு விமோசனம் தான் எப்படி?

இதர ஜீவன்கள் தங்கள் பாவங்களுக்கு தகுந்தபடி நாலு கால், ஆறு கால், எட்டு கால் இன்னும் ஏராளமான கால்களுடைய ஜீவன்களாகப் பிறந்து அலைந்து மடிகின்றன. சில ஜீவன்கள் அதே போன்ற பல ஜென்மாக்கள் எடுத்தாக வேண்டுமென்றும் சொல்லப்படுகிறது. அதாவது பாவத்தின் அளவு, தன்மை இவைகளைப் பொறுத்தது. பாவம் எதையும் செய்யாமலே மனிதன் ஒரு ஜென்மாவை கடக்க முடியுமா என்றால் அது அவனது புத்தியைப் பொறுத்த விசயம். நல்ல புத்தி இருந்தால் பாவ காரியங்களில் ஈடுபட மாட்டான். சத்வ குணங்களுடன் இருந்து ஒரு தினுசாக தப்பித்துக் கொண்டு விடுவான். இந்த ஜென்மாவில் நல்ல புத்தியும் நல்ல நடத்தையும் இருந்தால், நல்ல வழி நடக்கத் தோன்றும். ஒருவனுக்கு நல்ல ஆசார அனுஷ்டானம் தெய்வ பக்தி, சாஸ்திர அறிவு போன்றவை இருக்குமானால் அவனைப் பார்த்து பிறர், ''எல்லாம் பூர்வ ஜென்ம வாசனை இந்த ஜென்மாவில் தொடர்கிறது,'' என்பார்கள்.

பூர்வஜென்ம வாசனை என்றால் என்ன? பூர்வ ஜென்மத்தில் ஏற்பட்ட அறிவு. அதே அறிவு அப்போது முதிர்ச்சியடையாததால் இந்த ஜென்மாவில் தொடர்ந்து வந்து முதிர்ச்சி அடையும். "ஏண்டா? உனக்கு எழுத்து

வாசனை தெரியுமா?'' என்றார் ஒருவர். ''எழுத்துக்கு என்ன வாசனை? நீதான் சொல்லேன்!'' என்றான் அவன்.

எழுத்து வாசனை என்றால் எழுத்தறிவு என்று அர்த்தம். மற்றபடி எழுத்துக்கு என்ன வாசனை இருக்கும்? அதுபோல பூர்வஜென்ம வாசனை என்றால் பூர்வ ஜென்மத்தில் இருந்த அறிவு. அது நல்லறிவாக இருந்து விட்டால் வினைகளை அனுபவிக்கத்தான் என்றார்கள். வினைப்பயனை அனுபவித்த பிறகு விமோசனம். என்ன காரணத்துக்காக மனிதனாகப் பிறக்கிறான். இவனுக்கு விமோசனம் எப்படி? எப்படியோ பிறந்துவிட்டான். பக்தி, தெய்வ வழிபாடு, மகான்கள் தரிசனம், மகான்கள் சேவை இவைகளால்தான் இவன் விமோசனம் பெற முடியும். புத்தி அதில் போக வேண்டுமே!

## 10. கடவுள் வைக்கும் டெஸ்டில் உங்களால் பாஸ் ஆக முடியுமா?

மனிதன் மனிதனை ஏமாற்றலாம். ஆனால், பகவானை ஏமாற்ற முடியாது. பக்தர்களை பகவான் காப்பாற்று கிறார். நிச்சயம் காப்பாற்றுவார் என்று சொல்லி இருக்கிறார்கள். அவர் அதே போல் காப்பாற்றியும் இருக்கிறார். ஆனால், எப்படிப்பட்ட பக்தர்களை காப்பாற்றியுள்ளார்? ஏதோ நானும் பக்தி செய்கிறேன் என்று சொல்லி பக்தனாக இருந்து கொண்டு, ஏதோ ஒரு பிரதி பயனை எதிர்பார்த்து அதற்காக பக்தியில் ஈடுபடுவது, சில நாட்களில் தன் மனோரதம் நிறைவேற வில்லை என்றதும், 'கடவுளாவது கத்தரிக்காயாவது'

என்று சொல்லி பக்தியை கைவிடக் கூடியவர்களை பகவான் பக்தனாகவே பாவிப்பதில்லை. உண்மையான பக்தன்தானா என்று சோதனை செய்கிறார்.

ஆரம்பத்தில் பலவித கஷ்டங்களையும், துன்பம், துக்கம் எல்லாவற்றையும் கொடுத்து சோதிக்கிறார். 'என்ன ஆனாலும் சரி, எது போனாலும் சரி, பகவானே! உன்னை நான் விட மாட்டேன். நீ எதைச் செய்தாலும் எனக்குச் சம்மதமே,' என்ற எண்ணத்தோடு பகவானிடம் தீவிர பக்தி கொண்டு, தன்னையே அவனிடம் ஒப்படைத்து விடும் பக்தர்களை அவன் ரட்சிக்கிறான்.

முதலில் கஷ்டம், சிரமம், துக்கம். இதெல்லாம் சோதனை காலம். இதில் இவன் தேர்ச்சி பெற்று விட்டால் பிறகு அந்த பக்தனை அவர் காப்பாற்று கிறார். இவன் இழந்த பணம், பொருள் எல்லாமே ஒன்றுக்கு பத்தாக திரும்ப கிடைத்து விடுகிறது. இவனைப் பார்ப்பவர்களும், "அவன் பரம பக்தன். பகவான் அருள் பெற்ற புண்ணியசாலி. அதனால்தான் இப்படி ஒரு திடீர் யோகம் அடிக்கிறது," என்று பாராட்டுகிறார்கள். பக்கத்து வீட்டுக்காரன் இதைப் பார்த்துவிட்டு, "அடடா! பகவான் கடைசியில் இப்படி அருள்புரிவார் என்று தெரிந்திருந்தால் நானும் கூட பக்தி செய்திருப்பேனே!" என்கிறான்.

பலன் கிடைக்கும் என்றால்தான் பக்தி செய்ய வேண்டும். கடவுளை நம்ப வேண்டும் என்பது இவரது நோக்கம். ஆனால், பகவான் என்ன நினைக்கிறார்? இவன் எத்தனை நாளைக்கு இப்படி வேஷம் போடுகிறான் பார்க்கலாம் என்று நினைக்கிறார். எதையும் வேண்டாமல் என் மீதுள்ள பற்றுதல் காரணமாக பக்தி செய்கிறானா, அல்லது ஏதாவது காரியம் ஆவதற்காக பக்தி செய்கிறானா என்று சோதனையை ஆரம்பிக்கிறார். சோதனைகள் ஆரம்பமானதுமே... ஹூம்! கடவுள் கடவுள் என்கிறார் களே! நானும்தான் மூணு மாசமாக கோயிலைச்

சுற்றினேன். பலன் எதுவுமில்லையே! என்று சொல்லி கோயிலுக்கும் போவதை விட்டு விடுவான். இதெல்லாம் 'தேறாத கேஸ்' என்று பகவானுக்கு தெரியும். தீவிர பக்தர்கள் எல்லாவிதமான துன்பங்களையும் 'இதுவும் அவன் திருவிளையாடல்' என்ற எண்ணத்தோடு, மனம் தளராமல் 'நீயே கதி' என்று அவன் சரணங்களையே பற்றிக் கொண்டிருப்பார்கள். பகவானும் தன் சோதனைகளை முடித்துக் கொண்டு, 'இனி இவனை சோதிக்கக் கூடாது,' என்று திருவுள்ளம் கொண்டு அருள்மழை பொழிய ஆரம்பித்து விடுவார்.

## 11. வேலையில் இருந்து ஓய்வுபெறப் போகிறீர்களா?

சுக துக்கம் என்பது கர்மத்தின் பலனால் ஏற்படுகிறது, வினைப் பயன்களை அனுபவிக்கவே பிறவி ஏற்படுகிறது என்றார்கள். சுகம் என்றால் சந்தோஷப் படுகிறான். துக்கம் என்றால் எனக்கு வேண்டவே வேண்டாம் (வேறு யாருக்காவது கொடுங்கள் என்றுகூட) சொல்வார்கள். ஆனால், அது இவர்களை விடாது. பாவ புண்ணியத்துக்கு தகுந்த பலனை அனுபவிக்க வேண்டும்.

எமன் ஒருவனைப் பார்த்து, "நீ பாவமும் செய்திருக்கிறாய். புண்ணியமும் செய்திருக்கிறாய். அதனால் உனக்கு நரக வேதனையும் உண்டு, சொர்க்க வாசமும் உண்டு. எதை முதலில் அனுபவிக்க விரும்புகிறாய்?" என்று கேட்டான். அவன் கொஞ்சம் புத்திசாலியோ என்னவோ! முதலில் நரகவாசத்தை அனுபவித்து விடுகிறேன். பிறகு சொர்க்கவாசம் இருக்கட்டும்,"

என்றான். அதாவது ஏதோ கொஞ்ச காலம் கஷ்டப் பட்டாலும் பிறகு (கடைசி காலத்தில்) சுகமாக இருந்து விடலாமே என்பது அவன் எண்ணம்.

ஒரு உத்தியோகம் பார்த்து ஓய்வு பெற்றவர்கூட ஆரம்ப காலத்தில், உத்தியோகம் பார்க்கும் காலத்தில் எவ்வளவோ அல்லல்படுகிறார். வாங்குகிற சம்பளத்தில் குடும்பமும் நடத்தி, பிள்ளை பெண்களைப் படிக்க வைத்து அவர்களுக்கு நல்ல வேலை கிடைக்க அலைந்து திரிந்து ஏற்பாடு செய்து, கல்யாணமும் செய்து வைத்து விடுகிறார். ரொம்பவும் சிரமம்தான். அதன் பிறகு ஓய்வு பெறுகிறார். மாதா மாதம் பென்ஷன் வந்து விடுகிறது. பெண், பிள்ளைகள் அவரவர்கள் தனித்தனி யாகப் போய் சவுகரியமாக இருக்கிறார்கள். இவர் மாதா மாதம் பென்ஷனை வாங்கி பாங்கில் போட்டுவிட்டு தேவையான பணத்தை எடுத்து வைத்துக் கொண்டு வேளா வேளைக்கு (வித விதமாக) சாப்பிட்டு விட்டு ஈசிசேரில் சாய்ந்து கொண்டு தூங்குகிறார். சுகப்படுகிறார். இப்போது இவருக்கு ஆரம்பத்தில் பட்ட கஷ்டங்கள் நினைவுக்கு வருவதில்லை. முதலில் சிரமம், துக்கம். பின்னர் சுகம், சந்தோஷம்! பின்னது மனதில் நிலைத்து நிற்கிறது. முன்னது மறந்து விடுகிறது. இதுதான் உலகம்!

அதனால்தான் எமன் கேட்ட கேள்விக்கு, 'முன்னதாக நரக வேதனையை அனுபவித்து விடுகிறேன். பிறகு சொர்க்க வாசத்தை அனுபவிக்கிறேன்,' என்றான். பாவ, புண்ணியம் என்று இரண்டும் இருந்தால் கஷ்டம், சுகம் இரண்டும் உண்டு. ஏதோ ஒரு சில புண்ணியசாலிகளுக்கு ஆரம்பம் முதல் கடைசி வரை சுகமாகவே இருக்கும். இதுவே எல்லாருக்கும் பொருந்தாது. அதனால்தான் பாவத்தை செய்யாதே! செய்யாதே! என்றார்கள். ஆனால், புத்தி அவர்கள் சொல்வதைக் கேட்பதில்லையே!

## 12. பொழுது போக்க வழி தெரியாமல் தவிப்பவரா நீங்கள்?

சம்சாரத்தில் சுற்றி சுற்றி உழன்று கொண்டு இருப்பவன் அதிலிருந்து விடுபட்டு மேல் நிலைக்கு வந்து, ஞானம் பெற்று முக்திக்கு வழி தேட வேண்டும். கிணற்றுக்குள் இருக்கும் தவளையானது கிணற்றுக்கு உள்ளேயே பிறந்து வளர்ந்து அதற்குள்ளேயே சுற்றிச் சுற்றி வந்து மரிக்கிறது. இதற்கு இந்த கிணற்றுநீரைத் தவிர வேறு எதையும் தெரியாது. ஆனால், அதே தவளை தன் முயற்சியினால் கிணற்று நீரை விட்டு மேலே ஏறி வர முயன்றால் மேலுக்கு வந்து விடலாம். பத்து படிகள் உள்ள கிணற்றில் இருந்தாலும் தினமும் ஒரு படி, இரண்டு படி என்று கொஞ்சம் கொஞ்சமாக ஏறி வந்தால் ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் கிணற்றின் மேல் பரப்புக்கு வந்து விடலாம். அதன் பிறகுதான் இந்த பூமியின் பரப்பளவு அதற்குத் தெரியும். இங்கே விருப்பம் போல் தத்திக் குதித்து விளையாடலாம், ஓடலாம், திரியலாம் என்றெல்லாம் அதற்குப் புலப்படும். அப்படி ஒரு தவளை மேலே ஏறி வந்துவிட்டால் அது மீண்டும் அந்தக் கிணற்றுக்குள் விழ முயற்சி செய்யாது. விழவும் விரும்பாது. அதுபோல சம்சாரம் என்ற கிணற்றிலேயே சுற்றிச் சுற்றி வருபவன் ஞானம் பெற்று படிப்படியாக மேலே வந்து பரந்த வெளியாகிற பரப்பிரம்மத்தை அறிந்து கொள்ளவேண்டும். அப்படி அறிந்தவன் பரமானந்தத்தை அடைகிறான். அதை அடைந்த பிறகு மீண்டும் சம்சாரம் என்ற கிணற்றில் விழமாட்டான். விழ விரும்பவும் மாட்டான். இது சற்று கடினமானதாக வும் இருக்கலாம். இதுவே முக்திக்கு காரணமாகிறது என்கிறார்கள்.

சம்சாரத்தில் உழன்று கொண்டிருக்கும் வரையில் ஆசை, அன்பு, பாசம், பந்தம் இவைகளால் இவன் கட்டுப்பட்டிருக்கிறான். இவைகளை ஒவ்வொன்றாக நீக்கிவிட்டு வைராக்கியத்தைக் கொண்டு ஞானம் பெற்று விடுதலை பெற வேண்டும். இப்படிப்பட்ட ஞானமும், விடுதலையும் ஒரே ஜென்மாவில் கிடைத்துவிடும் என்றும் சொல்லிவிட முடியாது. ஆனால், ஒரு ஜென்மாவில் செய்யும் முயற்சியும் பலனும் அடுத்தடுத்து வரும் ஜென்மாக்களில் தொடர்ந்துவரும். அப்போது அவனுக்கு முக்தி, விடுதலை எல்லாம் உண்டு. மீண்டும் சம்சாரத்தில் விழ வேண்டி இராது.

சில மகான்களின் சரித்திரங்களைப் பார்க்கும்போது அவர்கள் எப்படி, எவ்வளவு வைராக்கியத்துடன் எல்லாவற்றையும் துறந்து தியானம், தவம் இவைகளையே ஆதாரமாகக் கொண்டு நீர், ஆகாரம், சுகம், துக்கம் இவற்றை மறந்து ஞானம் ஏற்பட்டு அந்த பரம்பொருள் ஒன்றையே பிடித்துக்கொண்டு முக்தி பெற்றார்கள் என்பதைக் காணலாம்.

இந்த ஞானம் என்பது ஏதோ சுலபமாகக் கிடைத்து விடக்கூடியதல்ல. திட சங்கல்பம், வைராக்கியம் இவைகளால்தான் கிடைக்கும். இதற்கு வழிகாட்டியாக ஒரு குருவைத் தேடிக் கண்டுபிடித்து அதன் மூலம் உபதேசம் பெற்று மனப்பக்குவம் பெற்று பின்னர் தெளிவு பெற்று ஞானம் பெற்று விடுதலை பெற வேண்டும். சுயமாக முயற்சி செய்வதைவிட குரு முகமாக பயிற்சி பெறுவதே உயர்ந்தது. அப்போதுதான் நாம் செய்வது சரியா, தவறா? எப்படிச் செய்ய வேண்டும் என்றெல்லாம் தெரிந்து கொண்டு அவர் உபதேசப் பிரகாரம் செய்ய முடியும். எல்லாம் எனக்குத் தெரியும், நான் யாரையும் கேட்க வேண்டியதில்லை என்று சொல்லி கோணல் வழியில் போய்விட்டால் நேர்வழிக்குத் திரும்புவது துர்லபம். குறிக்கோள், சம்சாரமாகிய கிணற்றில் தவளை

போல் சுற்றிக்கொண்டிராமல் படிப்படியாக மேலே வந்து குருவருள் பெற்று விடுதலை பெற வேண்டும், அதற்கு பொறுமையும் வேண்டும் முயற்சி செய்தால் இப்போ தில்லாவிட்டாலும் எப்போதாவது கிடைக்கும்! வீண் பொழுதுபோக்க வேண்டாம்!

## 13. அதிக நாள் வாழும் ஆசை உண்டா உங்களுக்கு?

ஜாதகம்! ரொம்ப பேருக்கு இதில் ஈடுபாடு உண்டு. குழந்தை பிறந்ததும் ஜாதகம் கணிக்கப் படுகிறது. அந்தக் குழந்தைக்கு ஜாதக ரீதியாக பலன் சொல்லும் போது ஆயுள் பாவம் எப்படி இருக்கிறது என்று சொல்வதுண்டு. குழந்தைக்கு 'பூர்ணாயுசு' என்பதுண்டு. அப்படியானால் எண்பது வயதுக்கு மேல் உள்ளதை 'பூர்ணாயுசு' என்பதுண்டு. ஆனால், எந்த தசையில் எந்த புத்தியில் எந்த அக்தரத்தில் எத்தனாவது நாள் எத்தனாவது நாழிகைக்கு மரணம் என்பதைச் சொல்ல மாட்டார்கள். (சொல்லக் கூடாது என்றும் ஜோதிட சாஸ்திரம் சொல்கிற தாம்!)

பிரம்ம தேவன் மனிதனையோ மற்ற ஜீவன்களையோ படைக்கும் போது அதன் தலையெழுத்தையும் எழுது கிறான். அதில், இவன் எத்தனை வருசம் வாழ வேண்டும் என்று எழுதுவதில்லையாம். இவன் எத்தனை தரம் மூச்சு விட வேண்டும் என்றுதான் எழுதி வைக்கிறானாம். அத்தனை மூச்சு விட்டதும் ஆயுள் முடிந்து விடுகிறது. இதைத்தான், 'அவர் கடைசி மூச்சை விட்டார்' என்று

சொல்வதுண்டு. இந்த மூச்சு எண்ணிக்கை சீக்கிரம் தீர்ந்து விட்டால் சீக்கிரம் மரணம். இந்த மூச்சு விடுவதை பந்தனம் செய்து பிரதிதினம் எண்ணிக்கையை சேமித்து வந்தால் வாழ்நாள் கூடுதலாகும் என்றும் ஒரு கணக்கு உள்ளது.

இதற்குத்தான் பிராணாயாமம் போன்ற விதிமுறைகள் உள்ளன. மூச்சை அடக்கி தியானம், ஜெபம், தபஸ் இவைகளைச் செய்வதால் ஆயுள் விருத்தியாகும் என்பது சாஸ்திரம். மகான்கள் கண்ட உண்மை.

அசுரர்கள் ஆயிரம். இரண்டாயிரம் வருசங்கள் தவம் செய்தார்கள் என்றுள்ளது. இவ்வளவு காலம் எப்படி உயிர் வாழ முடியும்? என்று கேட்டால் இவர்கள் தவம் செய்யும்போது மூச்சு விடுவதை அடக்கினார்கள். அதனால் தான் ஆயுள் விருத்தியாகிறது என்று கண்டுபிடித்துள்ளனர். இந்த மூச்சுக் காற்றுதான் பிராண வாயு. இந்த வாயு உள்ளே போய் வெளியே சீராக வந்து கொண்டிருந்தால்தான் பிராணன் நிலைக்கும். சரீரத்துக்கு இந்த பிராண வாயு இல்லையேல் அந்த சரீரம் வெறும் கட்டைதான்.

உடலில் மற்ற அவயங்கள் எது இல்லாவிட்டாலும் வாழமுடியும். இந்த பிராண வாயு இன்றி வாழ முடியாது. ஒரு சமயம் இந்த கண், காது, மூக்கு, கால், கை, காற்று இவற்றுக்கு ஒரு தர்க்கம் நடந்தது. யார் இல்லாவிட்டால் இந்த சரீரம் சிரமப்படும்? என்பது தர்க்கம். கண், சிலமணி நேரமும் மற்ற அவயங்கள் ஒவ்வொன்றும் ஒருசில மணி நேரமும் செயல்படாமல் இருந்தது. அப்போது இந்த சரீரம் கண் இல்லாமலே நான் வாழ முடிகிறது என்றதாம். பிறகு கண், காது, மூக்கு, கை, கால் இல்லாமலே நான் வாழ முடிகிறது என்றதாம். பிறகு பிராண வாயு, 'நான் சற்று நேரம் செயல்படாமல் இருக்கிறேன். அப்போது எப்படி இருக்கிறது என்று பார்த்துச் சொல்,' என்று சொல்லிவிட்டு சிறிது நேரம் ஸ்தம்பித்து நின்றதாம். சில

விநாடிகளில் சரீரம் கூக்குரலிட்டு பிராண வாயுவை கூப்பிட்டு, 'மற்ற எது இல்லாவிட்டாலும் என்னால் வாழ முடிகிறது. நீ இல்லாமல் என்னால் வாழ முடியாது. சீக்கிரம் நீ செயல்பட ஆரம்பித்துவிடு, நிறுத்தாதே,' என்று வேண்டிக் கொண்டதாம். பிராண வாயுவும் செயல்பட்டு உள்ளுக்கும், வெளியேயும் சென்று வர ஆரம்பித்தவுடன் சரீரம் அப்பாடா! மூச்சு வந்தது! என்று சொல்லி பெருமூச்சு விட்டதாம்.

ஆக, உடல் வாழ பிராண வாயு மூச்சு அவசியம். அதை அப்பியாசத்தினால் கட்டுப்படுத்தி மூச்சு விடும் நேரத்தை அதிகப்படுத்தி எண்ணிக்கையை தினமும் குறைத்து வந்தால் ஆயுள் விருத்தியடைந்து நெடுநாள் வாழலாம் என்றார்கள். அதிக நாள் வாழும் ஆசையுள்ள வர்கள் பழகிப் பார்க்கலாமே!

## 14 காலையில் எழுந்ததும் பேப்பர் படிப்பவரா நீங்கள் ?

ஒவ்வொரு நாளும் பொழுது விடிந்து படுக்கையில் இருந்து எழும்போதும் இரவு படுக்கைக்கு போகும் போதும் ஏதாவது ஒரு பகவான் நாமாவைச் சொல்ல வேண்டும் என்றார்கள். விடியற்காலையில் எழுந்திருக்கும் போதே 'பகவானே! இன்றைய பொழுது நல்லபடியாக போக வேண்டும். எண்ணிய காரியங்கள் நிறைவேற வேண்டும்' என்று தியானம் செய்வது நல்லது. அதே போல் இரவு படுக்கும் போதும், 'பகவானே! உன் அருளால் இன்றைய பொழுது நல்லபடியாக போயிற்று இரவு

நான் தூங்கும்போது நீ என்னை ரட்சிப்பாயாக' என்று தியானித்து விட்டுப் படுப்பதும் நல்லது.

இந்த ஜென்மா என்பது நிரந்தரமானதல்ல. என்றோ ஒருநாள் போக வேண்டியது. அது எப்போது எப்படிப் போக வேண்டும் என்பது முன்னதாகவே விதிக்கப்பட்டு விடுகிறது. அதை மாற்ற முடியாது. அகாலத்தில் ஏற்படக் கூடிய மரணத்தை பகவான் தடுத்து விடலாம். ஆயுள் முடிந்தவனை அவராலும் காப்பாற்ற முடியாது. எப்போது முடிகிறது என்று தெரியாதபடியால் தினமும் அவனை தியானம் செய்து வந்தால் ஒரு சில ஆபத்துகள் நீங்கலாம். மரணம் என்பதை சிலநாள் தள்ளிப் போடலாம். அப்படியே ஒருநாள் போய்விட்டாலும் பகவான் நாமா சொன்ன புண்ணியம் அவனுக்கு நல்ல பலனைக் கொடுக்கும்.

விடியற் காலையில் எதை எல்லாம் நினைத்தால் எல்லா பாவங்களும் விலகி புண்ணியம் கிடைக்கும் என்பதை பகவானே ஒரு பட்டியல் கொடுத்திருக்கிறார். இதை விடியற் காலையில் நினைக்க மறந்தாலும் கடைசி காலத்திலாவது (அதாவது டாக்டர் உதட்டைப் பிதுக்கின பிறகாவது) நினைக்கலாம் என்று ஒரு மாற்று யோசனையையும் கூறியுள்ளார். அப்படி நினைக்க வேண்டியவை: பகவான், கஜேந்திரன், கஜேந்திரனுக்கு முதலையும், மலைகள், காடுகள், தேவ விருஷங்கள், பிரம்மா, விஷ்ணு, பாற்கடல், பகவானின் ஆபரணங் களான ஸ்ரீவத்சம், கவுஸ்துபம், வனமாலை, கதாயுதம், சுதர்சனம், சங்கு, கருடன், ஆதிசேஷன், லக்ஷ்மிதேவி, நாரதர், பிரஹ்லாதன், பகவானுடைய அவதாரங்கள் சூர்ய, சந்திரன், அக்னி, பசு போன்றவை.

விடியற் காலையில் எழும்போதே இந்த ஞாபகம் தானா வருகிறது? பால் பாக்கெட் வந்தாச்சா? பால்காரன் வந்தாச்சா? காபி ரெடியா? இந்த ஞாபகம் தானே வருகிறது. வரவில்லை என்றால் கோபம் வருகிறது.

காலையில் இரண்டு விஷயங்களுக்கு கோபம் வரும். ஒன்று பால் வராமல் காபி ரெடியாகாவிட்டால் கோபம் வரும். 'என்னது இது இப்படி லேட் பண்றான். நாளையில் இருந்து வேறே பால்காரனுக்கு ஏற்பாடு செய்' என்கிறான். அடுத்தது காலையில் வழக்கமாக வரும் பேப்பர் (செய்தித்தாள்) வராவிட்டால் கோபம் வந்து விடும். உள்ளுக்கும் வாசலுக்கும் அலைவான். தெருக்கோடி வரை எட்டி எட்டிப் பார்ப்பான் காபியும், பேப்பரும் சரியான நேரத்துக்கு வந்துவிட்டால் போதும். அவனுக்கு ஒரே மகிழ்ச்சி. இப்படி இதையே நினைத்துக் கொண் டிருப்பவனுக்கு மேலே சொன்ன பகவான், கஜேந்திரனின் ஞாபகம் எப்படி சார் வரும். புராணத்தில் அப்படி இருக்கிறது. அதையும் தான் நினைத்துப் பாருங்களேன்.

## 15. சினிமா போஸ்டர் பார்ப்பதில் விருப்பம் உண்டா உங்களுக்கு?

**ப**கவானை வழிபடுவதற்கு பலமுறைகள் உண்டு. இதில், பஜனை பாடல்கள் என்பதும் ஒருமுறை. பாடல்கள், பாசுரங்கள், கவிதைகள் என்று ஏதாவது ஒரு முறையில் பக்தி செய்யலாம். நல்ல குரல் வளமும் வாக்கு வன்மை யும் இருந்தால் இந்தப் பாடல்கள் மூலம் பக்தி செய்வது இன்னும் சிறப்பாக அமையும். குரல் எப்படி இருந்தாலும் கூட சிலர் பக்திப் பாடல்களைப் பாடிப் பரவசம் அடைவதுண்டு. பகவான் பக்தியின் தன்மையைத்தான் பார்க்கிறான் குரலின் தன்மையைப் பார்ப்பதில்லை.

தியாகராஜர் தஞ்சை மன்னன் அளிக்க வந்த பதவி, பணம் இவற்றை வேண்டாம் என்று சொல்லி 'நிதி சால சுகமா?' என்று ஒரு பாடலும் பாடினார். பகவானின் அருள் பெற்றார். இதே போலத்தான் கதை, கவிதை

எதுவானாலும் கடவுளையும் பக்தியையும் வைத்தே இயற்றுபவர்கள் இருக்கிறார்கள். அதே கதை, கவிதை களில் விரசங்களையும் புகுத்தி இயற்றுபவர்களும் உண்டு.

பல வருடங்களுக்கு முன் ஒருவர் இருந்தார். இவர் என்ன செய்வார் என்றால் எங்கேயாவது கொலை, கொள்ளை, தற்கொலை என்று நடந்து விட்டால போதும். உடனே அதன் விபரங்களை சேகரித்து பாடலாக (கவிதையாக) இயற்றி உடனே அச்சடித்து அன்று மாலைக்குள் ஒவ்வொரு தெரு முனைகளிலும் பக்கவாத்யத்துடன் (அதாவது டமாரத்துடன்) பாட்டை யும் பாடி விற்பனை செய்து விடுவார். அந்தக் கொலை, தற்கொலை போன்ற விஷயங்களை ரொம்பவும் விபரமாக எழுதி பாடல் புனைந்து விடுவார். இதற்கும் தனி சாமர்த்தியம் வேண்டும்! இவர் இதுபோன்ற விஷயங் களையே அச்சடித்து விநியோகம் செய்வது வழக்கம். என்ன காரணம்? பணம் சம்பாதிக்க வேண்டும். இது நெடுநாள் நீடிக்கவில்லை என்பது வேறு விஷயம்.

சங்கீத மும்மூர்த்திகள் பாடியுள்ள பக்திப் பாடல் களும், ஜெயதேவர் போன்றவர்கள் பாடியுள்ள பக்திப் பாடல்களும், ஆழ்வார்கள், நாயன்மார்கள், ஆண்டாள் போன்றவர்கள் பாடியுள்ள பாசுரங்களும் இன்றும் நிலைத்து நின்று மக்களுக்கு வழிகாட்டியாக விளங்குவ தைக் காண்கிறோம். 'பச்சைப்' பாடல்கள் காளான்கள் போல் தோன்றி மறைந்து விடுவதையும் பார்க்கிறோம்.

பாடல்கள் மூலம் பக்தியைப் பரப்பி முக்தி பெற்ற வர்களின் சரித்திரங்களை தொன்றுதொட்டு படித்துப் பரவசமடைகிறோம். ஞாபகம் வைத்திருக்கிறோம். ஆனால் மற்றவை... பகவானுடைய தொடர்பு உள்ளது நிலைத்திருக்கும். இல்லாதது மறைந்து விடும். மனதை பகவான் பக்கம் திருப்பலாமே! சினிமா போஸ்டர் பக்கம் வேண்டாமே!

## 16. நகரவாசிகளுக்கு கடவுளை நினைக்க நேரம் இல்லையா?

மனிதனின் அன்றாட வாழ்க்கையில் பக்தி என்பது ஒரு முக்கியமான விஷயம். பக்தி, தெய்வ வழிபாடு என்பது இல்லையேல் மற்ற எவ்வித சுகபோகங்களிருந்தும் பயனில்லை. சாப்பிடவும் தூங்கவும் இனவிருத்தி செய்வதற்குமாகவா ஒரு ஜென்மா எடுக்க வேண்டும். மறுபிறவி இல்லாமல் இருக்க வேண்டும். அதைத்தான் விரும்ப வேண்டும். இந்த நிலையை அடைய பகவானிடம் பக்தி, வழிபாடு, பிரார்த்தனை என்றெல்லாம் வைத்திருக்கிறார்கள்.

இதற்குப் பல வழிகளையும் சொல்லியிருக்கிறார்கள். (1) விக்ரக பூஜை, ஆலய வழிபாடு, பாராயணம் என்பவை பக்தியோகமாம். (2) எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்துவது, பொதுப் பணிகளில் ஈடுபடுவது. பயன் கருதாது தொண்டு செய்வது, இவை கர்மயோகம். (3) ஆத்ம விசாரணை செய்துகொண்டு, பற்றுகளை நீக்கி ஞானம் பெறுதல், இது ஞானயோகம். (4) ராஜ யோகம். அதற்கு எட்டு படிகள் உண்டு. அவை இயமம், நியமம், ஆசினம், பிராணாயாமம், பிரத்யாகரநம், தாரணை, தியானம், சமாதி ஆகியவை.

இயமம் என்பது கொல்லாமை, பொய் சொல்லாமை, திருடாமை, பிறர் தரும் தர்மத்தைப் பெறாமல் இருத்தல், மனதை அடக்குதல் ஆகியவை. நியமம் என்பது உடலையும் மனதையும் சுத்தமாக வைத்திருத்தல். கற்க வேண்டியதை கற்றுணர்தல், கிடைத்ததைக் கொண்டு திருப்தியடைதல், தவம் செய்வது, உடல் பொருள்

ஆவியை இறைவனுக்கு அர்ப்பணித்தல் என்றும், ஆசினம் என்றால் (இருக்கை) உடல் வருந்தாமல் நெடுநேரம் ஒரே இருக்கையில் அமர்ந்திருக்கப் பழகுதல் என்றும் பிராணாயாமம் என்பதை மூச்சு விடுவதை, இடைகலை, பிங்கலை, சுழிமுனை என்றபடி அடக்கி விடுதல் (இதற்குப் பழக வேண்டும்) பிரத்யாகரநம் என்றால் புலன்களை அதன்வழி செல்லாமல் நம் வழியில் செல்லும் படி செய்தல், தாரணை — மனதை அலைய விடாமல் ஒரே இடத்தில் நிற்கச் செய்தல் அதாவது பகவானிடம் வைத்தல் என்றும், தியானம் என்பதை, ஒரே பொருளை வேறு எண்ணமின்றி சிந்தித்துக் கொண்டிருப்பது என்றும் சமாதிநிலை என்பதை மனம் அமைதி பெற்று, ஆடல் அசைவு இன்றி, வேறு உணர்வும் இன்றி நெடுநேரம் அமர்ந்து தியானத்தில் இருப்பது என்றும் சுருக்கமாகக் கூறியுள்ளார்கள்.

இப்படியெல்லாம் செய்து வந்தால் ஜீவன் தன்னைத் தான் அறிந்து கொள்ள முடியும். தன்னுள் இருக்கும் ஆத்மாவைக் கண்டு கொள்ள முடியும் என்றார்கள். இதெல்லாம் வேதாந்த விஷயங்கள் சார். அன்றாட வாழ்க்கைக்கு இதெல்லாம் ஒத்து வருமா சார்? என்று கேட்கலாம். இது ஒரு சிலருக்குத்தான் ஒத்துவராது என்பதும் பலருக்கு ஒத்து வரும் என்பதும் உண்மை.

நகர வாழ்க்கை என்பது ஒரு இயந்திர வாழ்க்கை யாகி விட்டது. எதைச் சொன்னாலும் நேரமில்லை, அவசரம், அவசரம்தான். இங்கு ஓடுவதும் சம்பாதிப் பதும் செலவு செய்வதுமே கடமை என்று கருதப்படு கிறது. ஆனால் கிராமாந்தரங்களில் அப்படி அலைவ தில்லை. அவர்களும்தான் வாழ்ந்து கொண்டிருக் கிறார்கள். ஏதோ வருகிற வருமானத்தில் குடும்பம் நடத்துகிறார்கள். அது வேண்டும், இது வேண்டுமென்று ஆசைப்படுவதில்லை. வீடு, நிலம் என்றிருந்து விட்டால்

அவர்களுக்கு வெளி வேலை அதிகமாக இருப்பதில்லை. அதனால் அவர்கள் ஆசார அனுஷ்டானம், தியானம், ஜெபம், தெய்வ வழிபாடு, புராண இதிகாசங்களைப் படிப்பது என்பவைகளில் ஈடுபட்டு விடுவதால் வீண் விவகாரங்களில் மனதைச் செலுத்துவதில்லை. ஓய்வு கிடைத்தால் தூங்குவார்கள். அவ்வளவுதான். இப்படி இருப்பதால் அவர்களும் மன அமைதியுடன் சந்தோஷமாகவே காலம் தள்ளுகிறார்கள்.

அதனால் நகரங்களில் இருந்தால் எதையுமே செய்ய முடியாது. பக்தி, வழிபாடு என்றெல்லாம் வைத்துக் கொள்வது சிரமம் என்று ஒரேயடியாகச் சொல்லிவிட முடியாது. இதில் அக்கறை உள்ளவர்களுக்கு முடியும். சிரத்தை இல்லாதவர்களுக்குத்தான் முடியாது. நகரங்களில் கூட தெய்வ வழிபாடு, உபன்யாசங்கள் எல்லாம் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. சிரத்தை இருந்தால் இதிலும் ஈடுபட நேரம் கிடைக்கும். வாழ்நாளில் எதை எதை எப்போது செய்வது என்று நேரத்தை வகுத்துக் கொண்டால் ஏன் முடியாது? வேறு எதற்கெல்லாமோ ஓடி ஆடி அலையும்போது இதற்கும் சிறிதாவது அலையலாமே! நம் நன்மைக்கு நாம்தானே பாடுபட வேண்டும். வியாதியுள்ளவர்தானே மருந்து சாப்பிட வேண்டும். பிறவிப் பிணியைப் போக்க பக்தி என்ற மருந்தைப் பயன்படுத்தலாமே! மனமிருந்தால் முடியும்!

## 17. விருந்தாளியை கவனிக்க வேண்டியது எப்படி தெரியுமா?

கீதையில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியும். அதில் முக்கியமான ஒரு வாக்கியத்தை எல்லாரும் சொல்லுவது வழக்கம். அதாவது, 'என்னை வழிபட நீங்கள் அதிக பிரயாசை படக்கூட வேண்டாம். ஒரு புஷ்பமோ, ஒரு பழமோ, அதுவுமில்லாவிட்டால் ஒரு உத்ரணி தீர்த்தமோ எனக்கு அர்ப்பணம் செய்யுங்கள். அதுவே போதும்,' என்று அதில் கடவுள் சொல்லியிருக்கிறார்.

இதில் கவனிக்கப்பட வேண்டியது என்னவென்றால் உன்னால் எதுவும் பெரிதாகச் செய்ய முடியாவிட்டால் புஷ்பம், பழம், தீர்த்தம் ஏதாவது ஒன்றை அர்ப்பணம் செய்தால் போதும் என்றார். இவர்தான் இப்படிச் சொல்லி விட்டாரே என்பதற்காக அவருக்கு ஒரு உத்ரணி தீர்த்தத்தை விட்டுவிட்டு, இவன் வடை, பாயசம் சக்கரைப் பொங்கல், போளி என்று விதவிதமாகச் சாப்பிடலாம் என்று அர்த்தமில்லை. நம்மால் அதிகப்படியாக எவ்வளவு செய்ய முடியுமோ அதை வசதிக்கேற்ப செய்ய வேண்டும்.

வீட்டுக்கு வெளியூரிலிருந்து ஒருவர் வருகிறார். "எனக்காக பிரமாதமாக சமையல் எதுவும் செய்ய வேண்டாம். ஒரு வத்தல் குழம்பு, சுட்ட அப்பளம், மோர் இருந்தால் போதும்," என்கிறார். இவர்தான் இப்படி சொல்லிவிட்டாரே என்று ஒவ்வொரு வேளைக்கும் வத்தல் குழம்பு, சுட்ட அப்பளம், மோர் சாதம் போட்டால் எப்படி இருக்கும். வந்த விருந்தாளி மறு நாளே, "கே. கே. நகர்ல என் 'பிரெண்டு' இருக்கான்,

அவனையும் பார்த்துட்டு அப்படியே நான் ஊருக்குப் போறேன்,'' என்று சொல்லிவிட்டுப் பையை எடுத்துக் கொண்டு 'பை பை' என்று சொல்லிவிட்டுப் போய் விடுவார்.

ஒரு ஆலயத்தில் உபன்யாசம் செய்வதற்காக ஒரு உபன்யாசகர் வந்திருக்கிறார். ஒன்பது நாள் உபன்யாசம். இதுபோன்ற உபன்யாசத்தின் போது உபன்யாசகருக்காக ஒரு 'பிளாஸ்கில்' பால் கொண்டுவந்து வைப்பார்கள். (பால் இத்துனூண்டு இருந்தாலும் பிளாஸ்க் பெரிசாக இருக்கும் சில இடங்களில்) உபன்யாசம் செய்யும் போது அவருக்குத் தொண்டை வரண்டு விடும். அதற்காக பால் வைப்பது சம்பிரதாயம். அவர் அவ்வப்போது அதில் கொஞ்சம் கொஞ்சமாக சாப்பிடுவார். இந்த உபன்யாசகர் வந்ததும் முதல்நாள் கோயில் காரியதரிசியிடம், ''எனக்கு பிளாஸ்கில் சூடாக வென்னீர் கொண்டு வந்து வைத்து விடுங்கள் போதும்,'' என்றார். அவர் அப்படியே வென்னீர் கொண்டு வந்து வைத்தார். உபன்யாசகரும் அந்த வென்னீரையே சாப்பிட்டுக் கொண்டு உபன்யாசம் செய்தார். மீதமுள்ள எட்டு நாட்களுக்கும் இவர் சொல்லாமலே பிளாஸ்கில் வென்னீர் கொண்டு வந்து வைத்து விட்டார் அந்தக் காரியதரிசி! பார்த்தார் உபன்யாசகர். பால் வேண்டும் என்று சொல்ல சங்கடமாக இருந்தது. ஒன்பது நாளும் வென்னீரையே சாப்பிட்டுக் கொண்டு உபன்யாசத்தை முடித்தார். கடைசியில் ஊருக்குப் புறப்படும் போது, 'சார்! உங்க காரியதரிசி பலே ஆசாமி சார்! நான் முதல் நாள் ஏதோ தலைவலியாக இருந்ததால் வென்னீர் கொண்டு வந்தால் போதும் என்றேன். அவர், உபன்யாசகருக்குப் பால் பிடிக்காது போலிருக்கிறது என்று எண்ணினாரோ என்னவோ, ஒன்பது நாளும் வென்னீரையே வைத்துவிட்டு ஒப்பேத்தி விட்டாரே! நான் பால் வேண்டாமென்றா சொன்னேன்!' என்று ஒரு நண்பரிடம் சொன்னார்.

இப்படி பிறருக்குத் தொந்தரவு வேண்டாம் என்பதற்காக குறைந்த பட்சம் இதைச் செய்தால் போதும் என்று சொன்னால் அதையே பிடித்துக் கொண்டு அதற்கு மேல் எதுவும் செய்யக் கூடாது என்பதல்ல! கேட்பவர் குறைந்த பட்சம் கேட்பார். கொடுப்பவர் அதிக பட்சம் கொடுக்க வேண்டும். அது தான் விவேகம். புரிகிறதா?

## 18. அடுத்தவருக்கு அன்பளிப்பாக தர வேண்டியது எது தெரியுமா?

நாம் யாருக்காவது அன்பளிப்பாக ஒரு பொருளைக் கொடுப்பதாக இருந்தால் அந்தப் பொருள் அவர்களுக்குப் பயன்படக் கூடியதாக இருக்க வேண்டும். அவர்களும் அதைப் பயன்படுத்திக் கொண்டிருக்க வேண்டும். அப்போதுதான் இருவருக்குமே திருப்தியாகவும், சந்தோஷமாகவும் இருக்கும்.

வித்தையில் அக்கறை இல்லாதவனுக்குப் புத்தகம் கொடுப்பதில் பயனில்லை; கல்யாணத்தில் விருப்பம் இல்லாதவனுக்குப் பெண் கொடுப்பதில் பயனில்லை என்றெல்லாம் சொல்லி இருக்கிறார்கள். இப்படியாக யாருக்கு எது ப்யன்படுமோ யார் எதை எப்படிப் பயன்படுத்துவார்களோ அதற்கு ஏற்ப வாங்கித் தர வேண்டும்.

ஒரு பாட்டிக்கு பேரன் புராண புத்தகம் பெரிய சைஸ், பெரிய எழுத்து, பனிரெண்டு அங்குல நீளம், எட்டு அங்குல அகலம், ஆறு அங்குல உயரம் உள்ள

தாக வாங்கிக் கொடுத்தான். விலை ரூபாய் நூறுக்கு மேல். பாட்டி வயதான காலத்தில் புராணம் படிக்கட்டுமே என்று வாங்கிக் கொடுத்தான். பிறகு ஒருநாள் பாட்டியைப் பார்க்கப் போனான். 'புராண புத்தகம் வாங்கிக் கொடுத்தேனே! எப்படி இருக்கிறது' என்று கேட்டான். அதற்கு அந்தப் பாட்டி, 'ஓ! அதுவா! நல்ல தூங்கறபோது இதை தலைக்கு உசரமா வெச்சு படுத்துக்கறதுக்கு ரொம்ப சவுகர்யமா தலைகாணி மாதிரி இருக்கு!' என்றாள். 'அட கடவுளே' என்று நினைத்துக் கொண்டு வருத்தப்பட்டான் அந்தப் பேரன்.

ஒரு அம்மாள் இருந்தாள். ஒரு அழகான கிளியை குறவன் விற்பதற்காகக் கொண்டு வந்தான். இவள் அதை விலை கொடுத்து வாங்கினாள். அழகான கூண்டு ஒன்று செய்து அதில் அதை வைத்து அருமையாக வளர்த்தாள். வேளாவேளைக்குப் பாலும், பழமும் கொடுத்து அதற்கு பேசவும் கற்றுக் கொடுத்தாள். தமிழ், ஆங்கிலம், இந்தி மொழிகளைக் கற்றுக் கொடுத்தாள். இந்த மொழிகளில் எந்த மொழியில் என்ன சொன்னாலும் அதற்குப் புரியும். கேட்கும் கேள்விகளுக்கு அதே மொழியில் பதில் சொல்லும். கிளியும் கொழு கொழுவென்று வளர்ந்திருந்தது. அவருடைய மாமியார் டில்லியில் இருந்தார். மாமியாருக்கு ஏதாவது நல்லதாக ஒரு பரிசு வாங்கி அனுப்ப வேண்டும் என்று ரொம்ப நாளாக ஆசைப்பட்டுக் கொண்டிருந்தாள். இப்போது ஒரு யோசனை தோன்றியது. மூன்று மொழிகள் பேசும் இந்த அழகான கிளியை அவருக்குப் பரிசாக கொடுத்து அனுப்பினால் அவள் சந்தோஷப் படுவாள். கிளியோடு தினமும் பேசி மகிழ்வாள் என்று தோன்றியது.

"இது ரொம்பவும் அழகான, அருமையான கிளி. இதை நான் அனுப்பிய பரிசாக என் மாமியாரிடம்

பத்திரமாக சேர்த்துவிடு,'' என்று டில்லிக்கு போன தோழியிடம் கொடுத்து அனுப்பினாள்.

மாமியாரிடம் இருந்து நாலைந்து நாளில் மருமகளுக்கு கடிதம் வந்தது. அதைப் படித்துப் பார்த்தாள் மருமகள். ''நீ அனுப்பிய கிளி வந்து சேர்ந்தது! ஆஹா! என்ன ருசி! என்ன ருசி! இரண்டு வேளைக்குக் கறி சமைத்துச் சாப்பிட்டேன்! மறுபடியும் யாராவது வந்தால் ஒரு கிளி அனுப்பிவை,'' என்று எழுதியிருந்தாள் மாமியார். தலையில் அடித்துக் கொண்டு தொப்பென்று உட்கார்ந்து விட்டாள் மருமகள்!

## 19. தெய்வ வழிபாட்டில் நம்பிக்கை இல்லையா உங்களுக்கு?

நீர் அருந்த வேண்டுமானால் அந்த நீரை மட்டும் தனியாக எடுத்து அருந்த முடியாது. அதற்கு ஒரு குவளையோ அல்லது இரண்டு கைகளோ தேவை. அதாவது ஒன்றை ஒன்று சார்ந்திருக்கிறது. 'நெய்க்கு தொன்னை ஆதாரமா, தொன்னைக்கு நெய் ஆதாரமா?' என்பார்கள். தொன்னை தான் நெய்யைத் தாங்கிக் கொண்டிருக்கிறது. நெய் இல்லாவிட்டால் வெறும் தொன்னைக்கு மதிப்பில்லை. தூர தூக்கி எறிய வேண்டியதுதான். அது போல உயிருக்கு உடம்பும் உடம்புக்கு உயிரும் ஒன்றுக்கொன்று ஆதாரம். உயிர் இல்லாவிட்டால் உடம்பைத் தூக்கி எறிய வேண்டியதுதான். உடம்பு இல்லையேல் உயிர் தங்குவதற்கு இடமிருக்காது. இப்படி ஒன்றை ஒன்று சார்ந்துள்ளது.

இந்த உடல் என்பதில் மற்ற ஜீவன்கள் இருக்கும். உடல்கள் எத்தனையோ உண்டு. அவற்றைவிட இந்த

மனித உடலுக்குத்தான் பெருமை சொல்லப்பட்டுள்ளது. அதுவும் உயிருள்ள மனித உடல்! இந்த உயிரும் உடலும் சேர்ந்திருந்தால்தான் 'மனிதன்' என்கிறோம். இந்த மனிதனால்தான் பல காரியங்களை நிறைவேற்ற முடிகிறது. மனிதன் எதற்கெல்லாமோ முயற்சி செய்தாலும் சாதனைகள் புரிந்தாலும் அது பிறவிப் பிணியைப் போக்கிவிட முடியாது. மனிதன் பகவானை அடைய முயற்சி செய்து, பகவானை அடைந்து பிறவிப் பிணியை போக்கிக் கொள்ள வேண்டும். இதற்கு வழி பகவானை வழிபடுவது ஒன்றுதான். மனிதனால்தான் பகவானை வழிபட முடியும்.

ஒரு சில புராணங்களில், எறும்பு, சிலந்தி, மயில், யானை, பசு போன்றவைகளும் பகவானை வழிபட்டு முக்தி அடைந்ததாக உள்ளது. ஆனால் இவை எல்லாமே பூர்வ ஜென்ம புண்ணியத்தால் பகவானை வழிபடும் பேறு பெற்றவை எனலாம். ஏதோ ஒரு சாபத்தாலோ, விதி வசத்தாலோ, மனித ஜென்மா இல்லாத வேறு ஒரு ஜென்மா கிடைத்திருக்கும். ஆனாலும் புண்ணிய வசத்தால் பகவானை வழிபட்டு முக்தியடைந்ததாகச் சொல்ல வேண்டும்.

ஆக எந்த ஜென்மாவானாலும் முக்தி பெற வேண்டுமானால் தெய்வ வழிபாடுதான் வழி. இந்த தெய்வ வழிபாடு என்பது மனதைப் பொறுத்த விஷயம். மனமானது தெய்வத்தையே நினைக்க வேண்டும். மனம் சதா அலைந்து கொண்டே இருக்கும். 'சிந்தையை அடக்கி சும்மா இருத்தல் அரிது,' என்றார்கள். மனம் எதையுமே நினைக்காமல் சூன்யமாக இருப்பதில்லை. 'நிச்சிந்தை' என்பார்கள். இது எப்படி சாத்தியம்? வேறு எதையும் நினையாமல் ஏதோ ஒன்றை மட்டுமே நினைத்துக் கொண்டிருப்பது. மனம் அந்த ஒன்றையே பற்றிக் கொண்டிருப்பது. அந்த ஒன்று என்பதுதான் தெய்வம்!

## 20. காசிக்குப் போனாலும் வீட்டு ஞாபகம் வருகிறதா?

'ஞானமும் கல்வியும் நயந்த காலை வானவர் நாடு வழிதிறந்திடுமே,' என்றார்கள். வானவர் நாடு என்பது தேவலோகம். அதாவது முக்தி பெற்றவர்கள் இருக்கும் வைகுண்டம். ஞானவான்கள் மட்டுமே இந்த இடத்தை அடைய முடியும். ஞானம் என்பது என்ன? எல்லாம் பரப்ரம்மம். சர்வம் பிரம்ம மயம். அந்த பரப்ரம்மத்தைத் தவிர வேறு எதுவும் கிடையாது. இங்கு காண்பது எல்லாம் அநித்யமானவை. அந்த பரப்ரம்மம் ஒன்றே நித்யமானது. அவனை அடைவதே வாழ்வின் குறிக்கோள் என்ற மனத் தெளிவு பெற்றவர் ஞானியாகிறார்.

ஆசாபாசங்களைத் துறந்து எங்கும் அந்த பிரம்மத்தையே கண்டு தன் உள்ளேயும் அந்த பரப்ரம்மத்தையே கண்டு அதையே தியானித்துக் கொண்டிருப்பவர் ஞானிகள். இந்த நிலை எல்லாருக்குமே எளிதில் கிடைத்து விடுவதில்லை. மனிதன் என்றால் எத்தனையோ பந்த பாசங்கள் இருக்கத்தான் இருக்கும். இதையெல்லாம் அந்தந்த காலத்தில் மறந்துவிட வேண்டும். துறந்துவிட வேண்டும். பகவானை அடைய வேண்டும் என்ற எண்ணம் மேலோங்கி நிற்க வேண்டும். அதற்கான மனத் தெளிவு ஏற்பட வேண்டும். மனம் தெளிந்த நிலைக்கு வர வேண்டும். தெளிந்த மனம் என்றால் இதுவா அதுவா என்ற குழப்பம் எதுவுமின்றி 'அது ஒன்றுதான்' நித்யமானது என்ற மனநிலை ஏற்பட வேண்டும்.

பந்த பாசங்களிலிருந்து விலக வேண்டும். காசிக்குப் போகிறேன், பத்ரிகாச்ரமம் போகிறேன் என்று சொல்லி

விட்டு அங்கே போய் உட்கார்ந்து கொண்டு ஊரில் மனைவி எப்படி இருக்கிறாளோ, பையன் பாஸ் செய்தானோ இல்லையோ, பெரிய பையனுக்கு வேலை கிடைத்ததோ இல்லையோ, மூன்றாவது பெண்ணுக்கு பிரசவம் ஆகிவிட்டதா என்றெல்லாம் கவலைப்பட்டு யோசித்து யோசித்துப் பொழுதைப் போக்கிக் கொண் டிருந்தால் அதற்கு காசிக்கும் பத்ரிகாச்ரமத்திற்கும் ஏன் போக வேண்டும். ஊரிலேயே உட்கார்ந்து கொண்டு வேளாவேளைக்கு சாப்பிட்டு விட்டுத் தூங்கலாம். இவர் களையே பார்த்துக் கொண்டு சுற்றி சுற்றி வரலாமே.

சரீர சுகம், பந்துக்களிடம் பாசம், பொருள்கள் மீது ஆசை இவைகள் எல்லாம் இருக்கும்போது தவமாவது ஞானமாவது? இப்படிப்பட்ட மனத்தெளிவு— ஞானம் என்பது ஏதோ ஒருவருக்குத்தான் ஏற்படும்.

மனம் தெளிந்து ஞானம் பிறந்து பகவானை அடைய முயற்சிக்க வேண்டும். நமது கடமைகளை நிறைவேற்றிய பின்னர் இதில் ஈடுபட வேண்டும். இதில் ஈடுபட்டபிறகு மீண்டும் குடும்பத்தில் சிக்கிக் கொள்ளக்கூடாது. விடுபட வேண்டும். இங்கு விடுபட ஞானம் ஏற்பட்டால் 'வானவர் நாடு வழி திறந்திடும்' எத்தனைபேர் அங்கு போக முடியுமோ போகலாம்!

## 21. சாஸ்திர, சம்பிரதாயங்களில் நம்பிக்கை உண்டா உங்களுக்கு?

பகவானுடைய சம்பந்தம் பெற்றது, வேத சம்பந்தம் உள்ளது யாவுமே புனிதமானது என்று சொல்லப்பட்டு உள்ளது. விபூதி, ருத்ராட்சம் யாவுமே புனிதமானது.

விபூதியை சாஸ்திர ரீதியாகத் தயார் செய்வார்கள். அந்த சமயம் சில மந்திரங்களைச் சொல்லி தயாரிப்பார்கள். இது உத்தமமானது.

எந்த சாம்பலாக இருந்தாலும் அது பரமேச்வர ப்ரசாதம் என்ற பக்தியோடு அணிந்து கொள்வது என்பது வழக்கம். ஆயினும் அதுவே வேத மந்திரங்களுடனோ, தெய்வத்துடனோ சம்பந்தப்பட்டிருப்பது மிகவும் உயர்ந்தது. இத்தகைய விபூதிக்கு பேய் பிசாசுகளை விரட்டும் சக்தியும் தீராத நோய்களைத் தீர்க்கும் சக்தியும உண்டு என்பது நம் முன்னோர்கள் கண்ட உண்மை.

இந்த விபூதியை பன்னீர் இலையில் வைத்துக் கொடுப்பார்கள். பன்னீர் இலை என்பதும் மிகவும் உத்தமமானது. முருகன் ஆலயங்களில் அதிலும் முக்கியமாக திருச்செந்தூர் முருகன் ஆலயத்தில் பன்னீர் இலையில்தான் விபூதியை வைத்துக் கொடுக்கிறார்கள்.

முருகனுடைய பெருமையை உணர்த்தும் சகல வேதங்களும் ஒன்று சேர்ந்து பன்னீர் மரங்களாகத் திருச்செந்தூரில் தோற்றம் கொண்டதாம். அதனால் முருகனுக்கு அபிஷேகம் செய்த விபூதியை பன்னீர் இலையில் வைத்துக் கொடுப்பதால் அந்த விபூதி வேத மந்திர சக்தியைப் பெறுகிறதாம். சக்தி பெற்றுள்ள இந்த விபூதிக்குப் பெருமை அதிகம்.

விசுவாமித்திரர் கூட ஒரு சமயம் காச நோயால் பீடிக்கப்பட்டு இருந்தபோது, திருச்செந்தூர் சென்று ஒரு மண்டலம் தங்கி இருந்து சுப்ரமண்யரை வழிபட்டபோது முருகனே வயோதிகர் வடிவில் வந்து தோன்றி விபூதியை அளித்து உடலில் பூசிக்கொண்டு, உள்ளுக்கும் சாப்பிடச் சொன்னாராம் விசுவாமித்திரரும் அப்படியே செய்ய அவரது காசநோய் பறந்து விட்டதாம். வயோதிகராக வந்தது முருகனேதான் என்று அவர் உணர்ந்து ஆடிப்பாடி பன்னீர் இலையில் உள்ள துதித்து மகிழ்ந்தாராம்.

பதினாறு நரம்புகளும் முருகனின் பதினாறு நாமாக்களைக் குறிக்கிறதாம். ஏதோ இலைதானே, தழை தானே என்று நாம் அலட்சியப்படுத்தக் கூடாது. ஒவ்வொன்றுக்கும் ஒரு மகிமை, பெருமை உண்டு. அதை நாம் உணர்ந்து கொள்ள வில்லை.

'பன்னீர் இலையைக் கிள்ளி வைத்துக் கொண்டு சிவனுக்கு அர்ச்சனை செய்தால் அது பரம புண்ணியத்தை யும், மங்களங்களையும் அளிக்குமாம். புஷ்பங்களை முழுசாகப் போட்டு அர்ச்சனை செய்யலாம். பத்ரம் எனப்படும் இலை, தழைகளை கிள்ளிப் போட்டுத்தான் அர்ச்சனை செய்ய வேண்டும். துளசி, பில்வம் இவைகளை தளம் தளமாகப் போட்டு அர்ச்சனை செய்ய வேண்டும். ஒத்தை, இரட்டை இலை விசேஷமில்லை. மற்றபடி மருவு, மருக்கொழுந்து போன்றவைகளைக் கிள்ளிப் போட்டு அர்ச்சனை செய்யலாம்.

விநாயகருக்கு அருகம்புல்லால் அர்ச்சனை செய்யலாம். ஆனால் அந்தப் புல்லை எடுக்கும் போது நகத்தால் கிள்ளி எடுக்கக்கூடாது என்று ஒரு சாஸ்திரம் இருக்கிறது. துளசி, பில்வம் எடுப்பதற்குக்கூட நாள் நட்சத்திரம் பர்வா என்று சாஸ்திரப்படி சம்பிரதாயப்படி நடந்தால் எல்லாம் சித்திக்கும்!

## 22. வெட்கப்படக் கூடாத நேரம் எது தெரியுமா?

பகவான் ரொம்பவும் எளிமையானவன். அதாவது சுலபமாக அடையக் கூடியவன் சிறியதாக ஏதாவது அவனுக்கு அளித்தாலும் அதையே பெரிதாக நினைத்து

பரம சந்தோஷப்படுகிறவன். அவனுக்கு வேண்டியது என்று எதுவுமில்லை. அவனிடம் இல்லாததும் ஒன்று மில்லை. ஆனால் எதைக் கொடுத்தாலும் ஏற்றுக் கொள்கிறான். அதிலும் அவனது நாமாவைச் சொன்னாலே போதும், சந்தோஷப்படுகிறான்.

பரமேச்வரனுக்கு 'ஆசுதோஷி' என்று பெயர், அதாவது அற்பமாக எதை அளித்தாலும் பரம சந்தோஷப் படுகிறவராம்.

நாம சங்கீர்த்தனம் செய்தாலே பகவான் சந்தோஷப் படுகிறான். அவனுக்கு ஆயிரம் நாமங்கள் சொல்லப் பட்டுள்ளன. எல்லா தெய்வங்களுக்குமே 'சகஸ்ர நாமம்' என்பது உண்டு. ஆயிரம் நாமாக்கள் கொண்டது. இவற்றில் ஏதாவது ஒரு நாமாவை தினமும் சொல்லலாம். எப்போதும் சொல்லலாம். அல்லது எப்போதாவதும் சொல்லலாம். சொல்லச் சொல்ல புண்ணியம்.

இதில் இன்னொரு விஷயமும் உள்ளது. பகவான் நாமாவை நாம் சொன்னாலும் புண்ணியம். மற்றவர் களைச் சொல்லும்படி செய்தாலும் புண்ணியம். இரண்டும் முடியாவிட்டாலும் காதால் கேட்டாலும் புண்ணியம் என்றார்கள்.

சில உபன்யாசங்களுக்கு நீங்கள் போயிருக்கலாம். உபன்யாசம் என்பதில் புராணங்களைச் சொல்வது. பகவான் குணங்களையும் பெருமைகளையும் சொல்வது. இது ஆங்காங்கே ஆண்டு முழுவதும் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. பக்த சிரத்தை உள்ளவர்களால் ஏற்பாடு செய்யப்பட்ட உபன்யாசங்களில் அடிக்கடி பகவான் நாமாவளியைச் சொல்வார்கள். உபன்யாசகர், 'நம பார்வதி பதயே' என்பார். வந்திருப்பவர்கள் 'ஹர ஹர மகா தேவா' என்று சொல்வார்கள். இதில் ஒரு விசேஷம் கவனித்திருக்கலாம்.

உபன்யாசகர் உரத்த குரலில், 'நம பார்வதி பதயே' என்றோ 'ஜானகி காந்தஸ்மரணே' என்றோ சொல்வார். வந்திருப்பவர்கள் வாய்க்குள்ளேயே 'ஹர ஹர மகாதேவா' என்றோ 'ஜெய் ஜெய் ராம' என்றோ பேருக்கு மெல்லிய குரலில் சொல்வார்கள். அதிலும் எல்லாம்கூட சொல்வதில்லை. ஏதோ புண்ணியம் உள்ளவர்கள் சொல்வார்கள்.

சிலசமயம் உபன்யாசகரேதான், 'நம பார்வதீ பதயே' என்று சொல்லிவிட்டு, 'ஹர ஹர மகாதேவா' என்றும் சொல்ல வேண்டியிருக்கும். வந்தவர்களும் இந்த நாமாவை உரத்த குரலில் மனமுவந்து சொல்ல வேண்டும். மனம் வருவதில்லையே! ஏதோ வெட்கம் வந்துவிடுகிறது. சொல்ல மாட்டார்கள்.

வாசலில் துடப்பம் விற்றுக் கொண்டு போகிறான். இவனுடைய 'சகதர்மிணி' (மனைவி!) 'வாசல்லே துடப்பம் போறது ·கூப்பிடுங்கோ' என்று சொல்கிறாள். இவன் வாசலுக்கு வருவதற்குமுன் அவன் நாலு வீடு தள்ளிப் போய்விடுகிறான். இவன் வாசலில் நின்று கொண்டே 'ஏ துடப்பம்! ஏ துடப்பம்' என்று உச்சஸ்தாயியில் கூப்பிடுகிறான். அவனும் திரும்பிப் பார்த்துவிட்டு வருகிறான். 'துடப்பம், துடப்பம்' என்று உரக்கக் கத்துவதில் இவனுக்கு வெட்கமில்லை. 'ஹரே ராமா ஹரே கிருஷ்ணா' என்று உரத்த குரலில் சொல்வது, இவனுக்கு மகா வெட்கம்! சில இடங்களில் சிலர்க்கு இப்படி! பல இடங்களில் திருப்பதி, பழநி, திருச் தான் குருவாயூர் போன்ற இடங்களில் ஆலயங்களில் ந்தூர், பார்த்தால் பக்தர்கள் தன்னை மறந்து போய்ப் கோவிந்தா, வெற்றி வேல் முருகனுக்கு கோவிந்தா குருவாயூரப்பா. கிருஷ்ணா என்று கோஷ அரோகரா, காணலாம். அதில் ஈடுபட்டதும் நாமும் போடுவதைக் போடுகிறோம். புண்ணியம் பெறுகி சேர்ந்து கோஷம் றாம்.

## 23. 'ஊருக்கு' உங்களுடன் வரப்போவது எது தெரியுமா?

பிறவியே வேண்டாம். அப்படிப் பிறவி எடுப்பதாக இருந்தாலும் பகவானை வழிபடக்கூடிய மனிதப் பிறவி வேண்டும் என்றார்கள். இப்படி கிடைக்க வேண்டுமானால் புண்ணியம் செய்திருக்க வேண்டும். அப்படிக் கிடைத்த ஜென்மாவும் பகவானை அடையக் கூடிய வகையில் இருக்க வேண்டும். திரும்பத் திரும்ப பிறவி— மரணம் என்றிருந்தால் அதற்கு முடிவு எப்போது? மனைவி மக்கள், சுற்றம் என்பதெல்லாம் என்ன? நீ யார்? நான் யார்? ஏன் இங்கு ஒன்று கூடி இருக்கிறோம். மறுபடியும் நீயோ நானோ எங்கே போகப் போகிறோம் என்று கேள்வி கேட்டு யோசித்துப் பார்த்தால் 'தெரியவில்லையே' என்ற பதில் தான் வரும்.

ஏதோ பிறந்தாகிவிட்டது. சுக, துக்கங்களை அனுபவித்தாகிவிட்டது. இனி நாம் அவனடி சேர வேண்டும் என்ற தீவிரமான எண்ணம் இருந்து கொண்டே இருக்க வேண்டும். இதற்குத்தான் 'புண்ணியத்தை சேர்த்துக்கொள்' என்றார்கள்.

புண்ணியம் கூடவே வந்து உதவும். 'நம்முடையது' என்று நாம் எதன் மீதெல்லாம் பற்றும் பாசமும் வைத்து இருக்கிறோமோ அவற்றில் எதுவும் நம்மோடு வராது. நாம் புறப்படும்போது (அதாவது அந்த ஊருக்கு!) இவைகள் எல்லாம் 'போயிட்டு வாங்க' என்று 'டாடா' காண்பித்துவிடும்.

''வண்ணப் பட்டும் வாசனையும் வாய்த்த கோலமும்
வண்கவிகை ஆலவட்டம் மற்றுஞ் சின்னமும்

திண்ணமுடன் யமபுரம் செல்லுங் காலத்தில்
சேரவர மாட்டாவென்று ஆடு பாம்பே''

என்றும்,

''யானை சேனை தேர்பரி யாவும் அணியாய்
யமன் வரும்போது துணையாமோ அறிவாய்
ஞானம் சற்றும் இல்லாத நாய்கட்குப் புத்தி
நாடி வரும்படி நீ நின்று ஆடு பாம்பே''

என்றெல்லாம் சித்தர்கள் பாடியுள்ளார்கள்.

நாம் பகவானை அடைய வேண்டும் என்ற ஞானம் ஏற்பட வேண்டும். பணம், பொருள் சேர்ப்பதிலும், ஊருக்குப் பெரியவனாக இருப்பதிலும் உள்ள சாமர்த்தியம் எல்லாம் இங்குதான் பாராட்டப்படும். இகத்துக்குப் பயன் படலாம். பரத்துக்குப் பயன்படாது. அதனால் பகவானை அடைய வேண்டுமென்ற ஞானம் வரவேண்டும். நாம் பகவானை நோக்கிச் செல்ல வேண்டும்! (சினிமா கொட்டகையை நோக்கி அல்ல!)

அப்படி நாம் அவனை நோக்கி ஒரு அடி எடுத்து வைத்தால் அவன் நம்மை நோக்கி வருவான். ஒரு பக்தனா வது நம்மை நோக்கி வருகிறானா என்று பகவான் எப்போதும் எதிர்பார்த்துக் கொண்டே இருக்கிறானாம்! அப்படி எவனாவது தன் மனதை பகவான் பக்கம் திருப்பி அவனை அடைய முயன்றால் பகவான் பரம சந்தோஷப் பட்டு அவனைத் தன்னிடம் அழைத்துக் கொள்கிறான்.

நம்மிடம் 'அஞ்ஞானம்'தான் அதிகமாக உள்ளது. 'ஞானம்' என்ற வெளிச்சம் தோன்ற ஆரம்பித்தாலே போதும். 'அஞ்ஞானம்' என்ற இருட்டு ஓட ஆரம்பிக்கும். அது மீண்டும் திரும்பிப் பார்க்காது. திரும்ப வராது? முயற்சி செய்யுங்கள். இந்த ஜென்மாவை வீணாக்காதீர் கள் என்றார்கள் மகான்கள். நம் காதுகளில் விழ வேண்டுமே!

## 24. வீட்டில் எதற்காக ஒட்டடை அடிக்கிறோம் தெரியுமா?

ஒரு காரியம் நடக்கிறது என்றால் அதற்கு ஒரு காரணம் இருக்கும். காரணமில்லாமல் காரியம் இல்லை. மணி சப்தம் கேட்கிறது. ஏன்? மணி அடிக்கிறது. அதனால் சப்தம் கேட்கிறது. இங்கு மணி சப்தம் காரியம். மணி அடிப்பது காரணம். சரி! மணி அடிப்பதை காரியம் என்று எடுத்துக் கொண்டால் அதற்கு என்ன காரணம் என்றால் யாரோ ஒருவர் மணியை ஆட்டுகிறார். இது காரணம்.

இப்படியாக ஒவ்வொரு காரியத்துக்கும் ஒரு காரணம் இருக்கும். அந்த காரணமே காரியமாகும்போது, அந்தக் காரியத்துக்கு ஒரு காரணம் இருக்கும். இப்படியே சொல்லிக் கொண்டு போகலாம்.

நாம் ஏன் பிறந்தோம்? இது காரியம். இதற்கு என்ன காரணம்? நம்முடைய நல்வினை, தீவினைதான் காரணம். பகவான் பல அவதாரங்கள் எடுத்தான். இது காரியம். ஏன் எடுத்தான்? வைகுண்டத்தில் லட்சுமியோடு சொக்கட்டான் ஆடிக்கொண்டிருக்கக் கூடாதோ? இருக்க மாட்டான். அவன் அவதாரம் எடுக்க வேண்டிய காரணம் இருந்தது, எடுத்தான். என்ன காரணம்? சாதுக்களை ரட்சிப்பதற்காகவும், துஷ்டர்களை நாசம் செய்வதற்காகவும் நான் ஒவ்வொரு யுகத்திலும் அவதாரம் எடுக்கிறேன் என்றான்.

இங்கு அவதாரத்தின் காரணம் சாதுக்களை ரட்சிப்பதா அல்லது துஷ்டர்களை நாசம் செய்வதா என்பதும் ஒரு கேள்வி. சாதுக்களை ரட்சிப்பதுதான்

நோக்கம். அதற்கு துஷ்டர்களை நாசம் செய்வது என்பது அதன் தொடர்பான செயல். இதைச் செய்தால் தான் அதைச் செய்ய முடியும். துஷ்டர்களை நாசம் செய்தால்தானே சாதுக்கள் துன்பமின்றி இருக்க முடியும். வீட்டை சுத்தம் செய்ய வேண்டுமானால் ஒட்டடை அடித்து குப்பையை வெளியே தள்ள வேண்டும். வீட்டை சுத்தம் செய்வது நோக்கம். ஒட்டடை அடிப்பது அதன் தொடர்பான காரியம். ஒட்டடையை ஒழித்தால்தான் வீடு சுத்தமாகும். அதுபோல துஷ்டர் களை ஒழித்தால்தான் சாதுக்களை ரட்சித்ததாகும். இதற்குதான் பகவான் அவதாரம் செய்கிறார் என்றார்கள்.

சரி! போகட்டும். பகவான்தான் சர்வ வல்லமை யுள்ளவர் ஆயிற்றே! வைகுண்டத்தில் இருந்தபடியே இந்த துஷ்டர்களை நாசம் செய்ய முடியாதா? ஏன் பூமிக்கு வர வேண்டும்? என்று ஒரு கேள்வி! அவரால் அது முடியும்தான். ஆனால், பூமியில் பல தபஸ்விகள் பகவானை நேரில் தரிசித்து முக்தி பெற வேண்டும் என்ற நோக்கத்தோடு பல்லாண்டுகளாக தவமிருந்து வருகிறார்கள். அவர்களுக்கு நேரில் தரிசனம் கொடுத்து முக்தியளிக்க வேண்டும் என்பதற்காக அவதாரம் எடுக்கின்றார். ஒரு தாத்தா கல்கத்தாவில் இருக்கிறார். பேரன் இங்கே இருக்கிறான். தாத்தாவின் போட்டோவை கையில் வைத்துக் கொண்டு, 'இது எங்க தாத்தா,' என்று சொல்லி சந்தோஷப்படுகிறான். ஒருநாள் அந்த தாத்தாவே நேரில் வந்து 'ஏண்டா பையா! சவுக்கியமா?' என்று கேட்டால் பேரன் எவ்வளவு சந்தோஷப் படுவான்! அதுபோல பகவானையே தியானித்துக் கொண்டிருக்கும் தபஸ்விகளுக்கு நேரில் தரிசனம் கொடுக்கத்தான் அவதாரம். அதுமட்டுமல்ல, சிலருக்கு சாபவிமோசனமும் நடைபெற வேண்டியிருந்தது. அதற்காகவும் அவதாரம் செய்ய வேண்டியிருந்தது.

இப்படியாக அவதாரம் என்பது காரியம், துஷ்ட நிக்ரகம், சாப நிவர்த்தி என்பதெல்லாம் காரணம். நாம் பிறந்திருப்பதும் ஒரு காரியம். அதற்கு என்ன காரணம்? நல்வினை, தீவினை எல்லாம்தான் காரணம்!

## 25. வாழ்க்கையில் புண்ணியம் தேட விருப்பமா உங்களுக்கு?

மகான்களை தரிசனம் செய்வதும் அவர்களை வணங்குவதும் புண்ணியம் என்றார்கள். நாம் அவர்களை விழுந்து வணங்கும் போது நம்முடைய பாவங்களும் தொலைந்து விடுவதாகக் கூறுவர். இப்படி மகான்களுக்கு ஒரு பெருமை. அவர்கள் நம்மைப் பார்த்தாலே போதுமாம். கை தூக்கி ஆசி வழங்கினாலும் இன்னும் விசேஷமாம். அதனால்தான் விபரம் தெரிந்தவர்கள் எங்கேயாவது ஒரு மகான் இருக்கிறார் என்றோ, வருகிறார் என்றோ தெரிந்தால் அங்கே போய் தரிசனம் செய்து விட்டு ஆசியும், அருளும் பெற்று வருகிறார்கள். இப்படி சில மகான்களும், இன்னும் சில சித்த புருசர்களும் உள்ளனர்.

தியானத்தின் மூலம் சித்தி பெற்றவர்களை விசேஷ மாக சொல்வதுண்டு. இவர்கள் சாதாரணமாக யார் கண்ணிலும் படமாட்டார்கள். தனிமையையும், மறைவை யும்தான் விரும்புவார்கள். இந்த சித்த புருசர்கள் பலவித சித்திகளைப் பெற்றவர்களாயினும் அதை வைத்துக் கொண்டு பணமோ, பொருளோ சம்பாதிக்க முயலுவ தில்லை. எங்கேயோ இருப்பார்கள். எங்கேயோ

போவார்கள். புண்ணியமுள்ளவர்கள் கண்ணுக்கு தென் படுவார்கள். சிலருக்கு ஏதோ ஒரு மூலிகையை காட்டிக் கொடுத்து, இது இன்ன வியாதியை போக்கக் கூடியது என்று சொல்லி, இது ரகசியமாக இருக்கட்டும் என்று அருள் செய்துவிட்டுப் போய் விடுவார்களாம். இன்றும்கூட திருவண்ணாமலைப் பகுதியில் பல சித்த புருசர்கள் இருப்பதாகவும், இரவு நேரங்களில் அவர்கள் அந்தப் பக்கங்களில் உலவுவதாகவும் ஏதோ ஒரு சிலருக்கு தென்படுவதாகவும், ஜன சந்தடியைக் கேட்டதும் மறைந்து விடுவதாகவும் கூறுகிறார்கள்.

அவர்களுக்கு ஆடை, அணிகலன், வாகனம் எதுவும் தேவையில்லை. திகம்பரராகவே திரிவார்கள். மானாபிமானம் என்பது கிடையாது. எங்கேயோ போவார்கள். அப்படிப்பட்டவரை புண்ணியசாலி யாராவது கண்டால் ஓடிப் போய் வணங்குவார்கள். பால், பழம் ஏதாவது கொடுப்பார்கள். அவர் அதைப் பெற்றுக் கொண்டு துளியாவது சாப்பிட்டு விட்டால் போதும். அதுவே பெரிய பாக்யம் என்று சந்தோஷப்படுவார்கள்.

## 26. 'நாடகமே உலகம்' என்பதில் நம்பிக்கை உண்டா உங்களுக்கு?

பகவானுடைய பல அவதாரங்களில் பத்து அவதாரங்களை முக்கியமாகவும் அவற்றில் ராமவதாரம் கிருஷ்ணாவதாரம் இரண்டையும் மிகவும் முக்கியமான தாகவும் சொல்லி இருக்கிறார்கள். பகவான் இப்படி பூலோகத்தில் மனித உருவில் அவதாரம் செய்து

மனிதர்களோடு பழகி, அவர்களுக்கு அருள் செய்திருப்ப தாகப் புராணங்களில் பார்க்கிறோம்.

வாமனாவதாரம் ஏன் எடுத்தார் என்றால், மகாபலி யிடமிருந்து தேவர்களுக்கு ராஜ்யத்தைப் பெற்றுக் கொடுப்பதற்காக. நரசிம்மாவதாரம் எதற்கு என்றால் இரண்யனை அழித்து தேவர்களை ரட்சிக்க. இதெல்லாம் தேவலோக ரகசியங்கள். எல்லாமே அங்கே தீர்மானம் செய்யப்பட்டு விடுகிறது. பூலோகத்தில் நாடகமாக நடிக்கப்படுகிறது.

ராமவதாரத்தின் முக்கிய நோக்கம் ராவண வதம். இந்த ராவணன் பிரம்மாவிடம் வரம் பெற்றவன். என்ன வரம்? தனக்கு பிரம்மாஸ்திரம், மனிதன் இவர்களைத் தவிர வேறு எதாலும் யாராலும் மரணம் ஏற்படக் கூடாது என்று வரம் பெற்றிருந்தான். வைகுண்டத்தில் தேவர்கள் நாராயணனிடம் வந்து ராவணனின் அட்டூழியங்களை சொல்லி முறையிட்டனர். 'சரி! நீங்கள் கவலைப்பட வேண்டாம். நான் கவனித்துக் கொள்கிறேன்,' என்றார் நாராயணன்.

பிறகு நாராயணன் யோசித்தார், இந்த ராவணனை எப்படி ஒழிப்பது என்று. பிரம்மாஸ்திரத்தினாலும் மனிதனாலும் தவிர மற்றவைகளால் அவனுக்கு மரணம் ஏற்படாது என்று தெரிந்தது. சரி, நாம் மனிதனாக அவதரித்து அந்த ராவணனை, பிரம்மாஸ்திரத்தினால் வதம் செய்து விடலாம் என்று தீர்மானம் செய்தார். ரொம்ப சரி! ஆனால், பூலோகத்தில் யாருக்கு பிள்ளையாக பிறப்பது என்று ஒரு கேள்வி. பகவானே பிள்ளையாகப் பிறக்க வேண்டுமானால் அதற்கு தகுந்த புண்ணியசாலி யார் இருக்கிறார்கள் என்று பார்த்தான்.

அயோத்தி சக்ரவர்த்தி தசரதன்தான் மகா மகா புண்ணியசாலி என்று தெரிந்தது. சரி, இவரே நமக்கு

பிதாவாக இருக்கத் தகுதியுள்ளவர் என்று தீர்மானம் செய்தார். திடீரென்று சர்வசாதாரணமாக பிறந்து விட்டால் அதில் என்ன பெருமை இருக்கிறது? அதனால் அவரை புத்ரகாமேஷ்டி யாகம் செய்யும்படி செய்து, அக்னி குண்டத்திலிருந்து எழுந்த பூதம், பாயசம் கொடுக்க அதை சாப்பிட்ட தசரத பத்தினிகள், ராம— லட்சுமண— பரத— சத்ருக்ணர்களைப் பெற்றார்கள்.

மகாலட்சுமி தனியாக வைகுண்டத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தால் இங்கு ராவண வதம் எப்படி நடக்கும். அதனால் அவள் ஜனக புத்ரி சீதையாக பூலோகம் வந்தாள். ராவணன் பரமசிவ பக்தன், மகா வரப்ரசாதி. அவனை வதம் செய்ய ஏதாவது நியாயமான காரணம் வேண்டு மல்லவா? அதனால் அவன் சீதையை அபகரித்துச் செல்லும்படி செய்தார். இது அதர்மம் என்று காரணம் காட்டி அவனை வதம் செய்ய புறப்பட்டார்.

ராவண வதத்துக்கு முன் பல சம்பவங்கள் நடந்தன. தேவர்களெல்லாம் வானரர்களாக பூலோகத்துக்கு வர வேண்டும் என்பது தேவலோகத்தில் செய்து கொண்ட ஏற்பாடு. அதே போல வானரர்களாக வந்தவர்களின் துணையோடு, ராவண வதம் நடைபெற்றது. பின்னர் சீதையை மீட்டு வந்து ராஜ்ய பட்டாபிஷேகம் செய்து கொண்டார் என்பது ராமாயணம். இதன் அடிப்படை என்னவென்றால் எல்லாமே முன்கூட்டியே ஒத்திகை பார்க்கப்பட்ட நாடகம். பூலோகத்தில் நடத்தப்பட்ட நாடகம். அதனால்தான் 'நாடகமே உலகம்' என்றார் களோ என்னவோ!

## 27. உங்கள் கைராசி எப்படிப்பட்டது?

மனிதர்கள் ஒரே மாதிரிதான் இருக்கிறார்கள். ஆனால், ஒரு சிலர் எங்கே எதற்கு சென்றாலும் காரியம் சாதகமாகிறது. ஒரு சிலருக்கு காரியம் சாதகமாவதில்லை. இதற்குக் காரணம் அவனவன் ராசி என்கிறார்கள். ஒருவிதத்தில் இதுவும் சரி என்றே தோன்றுகிறது.

ஒருவன் சின்னதாக ஒரு தொழில் ஆரம்பிக்கிறான். நாளடைவில் அது விருத்தியாகி எட்டு இடங்களில் கிளைகள் திறந்து விடுகிறான். ஆரம்ப காலத்தில் நடந்தும், பஸ்ஸிலும் போய்க் கொண்டிருந்தவன் பின்னர் ஸ்கூட்டர், பின்னர் கார் என்று ஆகி விடுகிறது. 'வாக்கிங்' போவதானாலும்கூட கார்லேதான் போவானாம்! இது அவனுடைய 'ராசி' சார் என்பார்கள். மற்றொருவன் எங்கெல்லாமோ கடன் வாங்கிப் போட்டு பெரிய அளவில் வியாபாரத்தைத் தொடங்குவான். உடனே பெரிய பங்களா, கார், வேலையாள் எல்லாமிருக்கும். நாலு வருசங்களுக்குப் பிறகு எல்லாம் போய் விடும். கடன் மட்டும் அப்படியே (வட்டி போட்டுக் கொண்டு) இருக்கும். இதையும் அவனுடைய 'ராசி' என்பார்கள்.

முதலில் சொன்ன ராசிக்காரர்களுக்கு நல்ல மதிப்பும், மரியாதையும் இருக்கும். ஏதாவது திறப்பு விழா என்றால் கூட அவரைக் கூப்பிட்டு திறந்து வைக்கச் சொல்வார்கள். 'அவர் நல்ல கைராசிக்காரர் சார். அவர் தொட்டது விருத்தியாகும்,' என்பார்கள். இன்னொருவர் இருக்கிறாரே! அவரை யாரும் கூப்பிட மாட்டார்கள். 'அவர் கைராசி இல்லாதவர்' என்பார்கள். அனுபவத்திலும் இதைப் பார்க்கிறோம்.

கைராசிக்காரர் ஏதோ ஒரு விசயமாக ஒருவரைப் பார்க்க போகிறார். இவர் போனதும் யாரைத் தேடிப் போனாரோ அவர் நிம்மதியாக வராண்டாவில் உட்கார்ந்து கொண்டு பேப்பர் படித்துக் கொண் டிருப்பார். இவர் போனதும், ''வாங்க சார்! எங்கே இந்தப் பக்கம்? என்ன விசயம்?'' என்று கேட்பார். இவரும் வந்த விசயத்தைச் சொன்னதும் உடனே அவர் உதவி செய்ய முன் வருவார். வந்த வேலை இரண்டே நிமிஷத் தில் முடிந்து விடுகிறது. இது கைராசிக்காரர் கதை.

மற்றவர் இருக்கிறாரே இவரும் அதே மாதிரி ஒருவரைத் தேடிக் கொண்டு போவார். இவர் போய் அங்கே நின்றதும், இவர் யாரைத் தேடிப் போனாரோ அவர் முதல் நாள்தான் டில்லி போயிருப்பார். அல்லது இவர் போகும் நேரத்தில்தான் அவர் டில்லி போவதற்காக சாமான்களை காரில் அவசர அவசரமாக ஏற்றிக் கொண் டிருப்பார். இவரைப் பார்த்ததும், ''ஓ! நீங்களா? நான் இப்போ அவசரமாக டில்லிக்கு போயிட்டிருக்கேன். நீங்க இன்னொரு நாள் சாவகாசமாக வாங்க,'' என்று சொல்லி விட்டு காரில் ஏறி விடுவார். இது இவருடைய ராசி!

பெரிய விசயத்துக்கே போக வேண்டாமே! ஒருவர் ஒரு கோயிலுக்கு போய் சாமி தரிசனம் செய்துவிட்டு வரலாம் என்று போவார். இவர் போகும் நேரத்தில் அபிஷேகம் நடந்து கொண்டிருக்கும். இவர் அங்கே உட்கார்ந்து விடுவார். அபிஷேகம், அலங்காரம், அர்ச்சனை, தீபாராதனை பார்த்துவிட்டு பிரசாதமும் வாங்கி வருவார். இவர் 'ராசி'க்காரர். மற்றவர் இருக்கிறாரே! அவர் இதே மாதிரி கோயிலுக்குப் போவார். இவர் போகும் போது எல்லாம் முடிந்து குருக்கள் கோயில் கதவை மூடி பூட்டி சாவியை தோளில் போட்டுக் கொண்டு வருவார். இவருடைய ராசி அப்படி! கோயிலில் சுண்டல் வினியோகம் என்று வைத்துக் கொள்ளுங்களேன். இந்த நல்ல ராசிக்காரர் முன் வரிசையில் நிற்பார். இவருக்கு

ஒரு கை நிறைய சுண்டலை அள்ளிப் போடுவார்கள். மற்றொரு 'ராசி'க்காரர் கடைசி வரிசையில் நிற்பார். சுண்டல்காரர் இவரிடம் வரும்போது பாத்திரம் காலியாக இருக்கும். ஏதோ இல்லை என்று சொல்லாமல் ஒரு மூணு கடலை இவர் கையில் விழும். அதோடு பாத்திரம் காலி! இது இவருடைய ராசி!

## 28. சிற்றின்ப பிரியரா நீங்கள்?

குடும்பம், குடும்ப வாழ்க்கை என்பது மனிதர்களுக்கும் இதர ஜீவன்களுக்கும் உண்டு. இந்த குடும்ப வாழ்க்கையில் ஏதோ ஒருவித சுகத்தை கண்டு மயங்கி விடுகிறார்கள். இது ஒரு சிற்றின்பம், மாயை என்பதை புரிந்து கொள்வதில்லை. ஒரு சின்ன கதை!

மணிகண்டேஸ்வரர் என்ற ஒரு முனிவர் இருந்தார். அவருக்கு ஒரு மகனும் உண்டு. இந்த முனிவருக்கு வேறு ஒரு பெரிய (சீனியர் என்று வைத்துக் கொள்ளுங்களேன்!) முனிவரால் பன்றியாகப் போகக் கடவது என்று சாபம் ஏற்பட்டது. முனிவர் மிகவும் வருத்தப்பட்டார். சீ! பன்றியாகவா நான் மாற வேண்டும்? என்று வேதனைப் பட்டார். உடனே ஒரு யுக்தி தோன்றியது. தன் மகனை கூப்பிட்டார். 'நான் பன்றியாக இன்னும் சிறிது நேரத்தில் மாறி விடுவேன். நீ என்னை உடனே வெட்டிப் போட்டு விடு. இந்த பன்றி ஜென்மம் தொலையட்டும். இதற்காக நீ வருத்தப்படாதே,' என்றார். 'இதனால் தகப்பனாரைக் கொன்ற பாவம் ஏற்படுமோ என்று பயப்படாதே. தகப்பனார் சொல்படி நடந்தால் பாவமில்லை,' என்றார்.

முனிவர் பன்றியாக மாறி விட்டார். மகன் அதை வெட்டுவதற்காக கத்தியை எடுத்து வந்தான். இதற்குள் அந்த பன்றிக்கு அக்கம் பக்கத்திலிருந்த சாக்கடை, அசிங்கம் இவைகளின் வாசனை ரொம்பவும் பிடித்துப் போய் விட்டது. ஆகா! என்ன வாடை! என்ன சுகம் என்று எண்ணியது. உடன் பையனிடம் 'இப்போது எனக்கு ஏதோ சுகமாகத் தெரிகிறது. நீ இப்போது என்னை வெட்ட வேண்டாம். இன்னும் ஒரு வருசம் சென்ற பிறகு வந்து வெட்டலாம்' என்றது. மகனும் போய் விட்டு ஒரு வருசத்திற்கு பிறகு அங்கு வந்தான். அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. இந்த பன்றியோடு கூட மற்றொரு பன்றியும் பக்கத்தில் ஏழெட்டு பன்றி குட்டிகளும் இருப்பதைப் பார்த்தான்.

அப்போது அந்த (முனிவராயிருந்த) பன்றி, 'மகனே! இப்போது என்னை வெட்ட வேண்டாம். இதோ என் அன்பு மனைவி, மக்கள். இவர்களை பாதுகாக்க வேண்டி நான் உயிர் வாழ வேண்டியிருக்கிறது. மேலும் இவர்களிடம் நான் மிகுந்த பிரியம் வைத்துள்ளேன். இவர்களுக்கும் என் மீது அளவு கடந்த அன்பு உள்ளது. அதனால் நான் இப்போது ரொம்பவும் சந்தோஷமாக இருக்கிறேன். நீ இப்போது போய் விடு,' என்றது.

மகனும், 'சரி' என்று சொல்லி விட்டுப் புறப்பட்டான். தன் தகப்பனார் ஒரு முனிவராக இருந்தும் பன்றியாக மாறியவுடன் இது ஒரு இழிவான ஜென்மம் என்றுகூட தோன்றாமல் மற்றொரு பன்றியுடனும் பன்றிக் குட்டிகளுடனும் சேர்ந்து கொண்டு சகதியிலும் சாக்கடையிலும் விழுந்து புரண்டு கொண்டு எதையெல்லாமோ சாப்பிட்டு விட்டு, இந்த குடும்பமே சுகமாக இருக்கிறது. இவர்களிடமே எனக்கு ஆசையும் அன்பும் இருக்கிறது என்று சொல்கிறாரே! ஆசாபாசங்களுக்கு அடிமையாகி, பன்றி ஜென்மத்தை விட்டு நற்கதி அடையக்கூட மனமில்லாமல் குடும்பம் என்ற மாயையில் மயங்கி விட்டாரே! ஹூம்.

அது அவர் தலையெழுத்து என்று எண்ணியபடியே போய்ச் சேர்ந்தான்.

குடும்ப வாழ்க்கை எவ்வளவு அவஸ்தையும் அல்லலுமாக இருந்தாலும் அதிலேயும் சுகம் இருக்கிறது என்று நினைத்து, சிற்றின்பமே பெரிதாக நினைக்கிறார்கள்! பேரின்பத்தை அடைய முயற்சி செய்யக் கூடாதா? என்று தான் மகான்கள் சொல்கிறார்கள். சிற்றின்பம் என்பது நேரிடையாக அனுபவிக்கும் (அற்ப) சுகம். பேரின்பம் என்பது எங்கேயோ எப்போதோ கிடைக்கக் கூடியது. அதனால் கைமேல் கிடைக்கும் சிற்றின்பத்தை விட்டுவிட சாதாரண மனிதனுக்கு மனம் வருவதில்லை. ஞானம் பெற்றவனுக்கேதான் மனம் வரும். மற்றவர்கள் ஆசைக்கு அடிமைதான்!

## 29. எதையும் உற்று கவனிப்பவரா நீங்கள்?

தெய்வங்களின் படங்களை வீடுகளில் சுவரில் மாட்டி வைப்பார்கள். சில வீடுகளில் சுவரில் ஆணி அடிக்கக் கூடாது என்று சாமி படத்தை ஏதோ சமையல் அறையில் ஒரு மூலையில் ரகசியமாக வைத்திருப்பார்கள். எப்படியோ, ஒரு சாமி படம் வீட்டில் இருக்கும். இப்படி வீடுகளில் தெய்வங்களின் படங்களை வைக்கும்போது தன்னையறியாமல் ஒரு தெய்வ பக்தி ஏற்படுகிறது.

லட்சுமி படத்தை கூர்ந்து கவனித்துப் பார்த்தவர்கள் எத்தனை பேர்? அதில் என்னென்ன இருக்கிறது, அதன் தத்துவம் என்ன என்று யோசித்துப் பார்த்தவர்கள் எத்தனை பேர்?

படத்தில் ஒரு தடாகம் இருக்கும். இது ஞான ஊற்றினால் நிரம்பியுள்ள தடாகம். பூஜை செய்யச் செய்ய ஞானம் ஏற்படும். மாலையைத் தூக்கிப் பிடித்த யானை. இது மதம், ஆணவம் கொண்டது. நம் மனமும் அப்படிப்பட்டதுதானே! மூலாதாரக் கடவுளாகிய கஜமுகன் நம்முள்ளே இருந்துகொண்டு குண்டலினி சக்தியை மாலையாகத் தூக்கித் தருகிறான். கலைந்த மேகம், அதாவது அலைந்து திரியும் அஞ்ஞான மூட்டம். இந்த அஞ்ஞான மேக ஓட்டம் எடுத்து ஒதுங்கிவிட ஞானம் என்ற தெளிவு ஏற்படும்! அன்னப் பறவை நீர் நீக்கி பால் பருகும். மகாலட்சுமியை வழிபடுவோர் பாவம் நீங்கி புண்ணியம் பெறுவர். மலர்ந்த செந்தாமரை நம்முள்ளே இருக்கும் இதயக் கமலம். ஊத்தைக் குழி என்று சொல்லப்படும் இந்த சரீரமாகிய சேற்றுக்குள்ளே மலர்ந்து நிற்கும் செந்தாமரை. கும்பியிலிருந்து குண்டலினிக் கொடி உயர்ந்து இதயத்தில் ஞானத் தாமரையாக மலர்ந்து மலரிலிருந்து உதிரும் மகரந்தத்தை வண்டுகள் சுற்றி சுற்றி வந்து குடித்து அதிலேயே உட்கார்ந்து விடுவது போல் ஞானம்பெற்ற இதயத்தை மகாலட்சுமியும் சுற்றி சுற்றி வந்து அதிலேயே அமர்ந்து விடுகிறாளாம். நம் இதயத் தாமரையில் மகாலட்சுமி அமர்ந்துவிட்டால் பிறகு வேறு என்ன வேண்டும்? மறைந்த பாதங்கள், தாமரை மலருக்குள் மறைந்திருக்கும் பாதங்கள் நம் இதயத் தாமரையில் அவளது பாதங்கள் மறைந்திருக்கும்.

மகான்கள், ''உன் பாத கமலங்களை என் இதயக் கமலத்தில் வை!'' என்றுதானே வேண்டுகிறார்கள். அவள் அதைத்தான் செய்கிறாள். அபய வரகரங்கள்: இக பர சுகங்களை இரு கரங்களாலும் அளிக்கிறாள். வழிபடுவோருக்கு இங்கேயும் அங்கேயும் சுகம். இரு தாமரைகள்: நமக்குள்ள இரு கணகளும் ஊனக் கண்களே! அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டுள்ளன. இதற்கு எந்த ஆபரேசனும் பயன் தராது மகாலட்சுமியை வழிபடு

வோருக்கு இதே இரண்டு ஊனக் கண்களும், ஞானக் கண்களாக மாறிவிடும். கமல நயனம் என்பார்களல்லவா! அப்படி இரண்டு ஞானக் கண்களைப் பெறலாம்.

தலையில் கிரீடம்: குவிந்து மேல் நோக்கியுள்ளது. வழிபடுவோருக்கு விரிந்து கிடக்கும் ஐம்புலன்களையும் ஒன்று சேர்த்து ஞானத்தை மேலோங்கச் செய்கிறாள். ஆலயங்களில் தம் தலையில் பகவானின் கிரீடத்தை வைக்கிறார்கள் அல்லவா? ஞானம் உண்டாகுமாம். மரம்: ஒரு மரம் பலவிதங்களில் பலன் தரக்கூடியது. ஆரம்பத்தில் கொஞ்சம் தண்ணீர் விட்டு வளர்த்துவிட்டால் பிறகு காலம் காலமாக நமக்கு எப்படியெல்லாமோ பயன் தருகிறது! மகாலட்சுமியை வழிபட்டு விட்டால் காலம் காலமெல்லாம் நமக்கு சகல க்ஷேமங்களையும் அளித்துக் கொண்டிருப்பாள். இப்படியாக அந்தப் படத்தில காட்டியுள்ள ஒவ்வொன்றுக்கும் ஒரு பொருள் கூறப்பட்டுள்ளது! உங்கள் வீட்டிலும் ஒரு படம் இருக்கிறதா? ஒன்று இருக்கட்டுமே!

## 30. 'புகை' பற்றிய ரகசியங்களை அறிய விருப்பமா உங்களுக்கு?

**யாகம்,** யக்ஞம், ஹோமம் இவை நடைபெறும் இடங்களுக்கு பலர் போயிருக்கலாம். இவற்றிலிருந்து வரும் புகையானது மிகவும் புனிதமானது என்பார்கள். இந்தப் புகையை சுவாசித்தாலும், புகை மேலே பட்டாலும் உடலுக்கு ஆரோக்கியமானது. ஆகாயத்தில் பரவியுள்ள விஷக் கிருமிகளையும் இந்தப் புகை நாசம் செய்யுமாம்.

அதனால்தான் யாகம், யக்ஞம், ஹோமம் இவற்றை யெல்லாம் உலக நன்மைக்காக செய்யப்படுவதாகச் சொல்கிறார்கள். இவற்றால் அக்னி முதல் சகல தேவதை களும் சந்தோஷப்பட்டு அருள் செய்கிறார்கள், காலா காலத்தில் மழை, வெயில் என்பதெல்லாம் நியதிப்படி நடக்கிறது என்றும் சொல்வார்கள். ஏராளமான பொருட் செலவில் ஆங்காங்கே இவை நடைபெற்றுக் கொண்டு தான் இருக்கின்றன.

இந்தப் புகையை தூமாவதி அம்பாள் என்று சொல்வார்கள். பராசக்தியின் பத்து வகையான அவதாரங் களில் இதுவும் ஒன்று. புகை என்றால், ஊதுபத்தி, சாம்பி ராணி, கற்பூரம் இவற்றிலிருந்து வரும் நறுமணம் உள்ள புகையைச் சொன்னார்கள். தூபம், தீபம், நைவேத்தியம் என்கிறோமல்லவா! இதில் தூபம் முதலாவது, ஜ்வாலையோடு கூடியது. தீபம் இரண்டாவது, மூன்றா வது நைவேத்தியம்.

அடுப்பு முதலில் புகையும், பிறகு நன்றாக எரியும். அதன் மீது வைக்கப்பட்ட அரிசி சாதமாகி நைவேத்தியமா கிறது. இந்த நைவேத்தியத்திலிருந்து புகை போல் வரும் ஆவியைதான் கடவுள் ஏற்றுக் கொள்கிறாராம். அதனால் நைவேத்தியத்துக்கு சர்க்கரைப் பொங்கலை எடுத்துச் செல்லும்போது யாராவது, "ஊம்... சர்க்கரைப் பொங்கலா! கம கமன்னு வாசனை வருகிறதே!" என்று மூக்கை உறிஞ்சினாலும்கூட அது பிறகு நைவேத்தியத் திற்குப் பயன்படாதாம். அதனால்தான் நைவேத்தியத்தை ஒரு துணியினால் மூடி எடுத்துப் போவார்கள். ஒருமுறை நாம் எதையாவது முகர்ந்து பார்த்து விட்டால் பிறகு அது பகவானுக்கு அர்ப்பணமாகத் தகுதி இல்லையாம். இப்படி இந்தப் புகையை தெய்வமாகவும் சொல்லியிருக்கிறார்கள்.

இந்த தூமாவதி பல யுகங்களாக இருப்பதால் இவளை வயது முதிர்ந்த கிழவியாகச் சொல்லப்பட்டுள்ளது. இவளை வழிபட்டால் ரோகங்கள் நிவர்த்தியாகுமாம்.

இவள் கிழவியானதால் மக்களுக்கு நல்ல தூக்கம் தருவாள். துக்கம் தரமாட்டாள். காயைப் பழுக்க வைக்கப் புகை போடுவார்கள். காய் பழுத்து விடும். அஞ்ஞானத்தால் காயாக இருக்கும் நம் உள்ளத்தை ஞானம் என்ற புகையினால் கனிய வைப்பாள். கையில் முறம் வைத்திருப்பாள். கல், உமி போன்ற அசுத்தங்களை நீக்கி நமக்கு நல்ல அன்னம் தருவாள். அதுவும் முழுச் சாப்பாடு அளிப்பவள். உலக ஜீவன்கள் அனைத்துக்கும் ஆகாரம் அளிப்பவள்.

சீ! இது என்ன புகை? என்று கண்ணைக் கசக்கிக் கொள்ள வேண்டாம். அந்தப் புகைதான் ஜ்வாலையாகி, ஜோதியாகி ஒளிகாட்டி வாழ வைக்கும் தூமாவதி தேவி! நமது மதம், புராணம், சாஸ்திரம் எல்லாவற்றிலுமே ஒரு தெய்வீகம் நிறைந்துள்ளது. நாம்தான் புரிந்து கொள்ள வேண்டும்!

## 31. சேற்றில் கால் வைத்துவிட்டால் என்ன செய்ய வேண்டும் தெரியுமா?

மனிதனாகப் பிறந்த ஜீவன் கடைசியில் பிரம்மத்தை அடைந்தால் மீண்டும் பிறவி என்பது கிடையாது என்று சொல்லப்பட்டது. இது எப்படி சாத்தியம், இதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதும் கேள்விகள்தான். மனிதனின் கடைசி காலத்தில் புத்தி, மனம் இவை சரியான நிலையில் இருந்தால் அந்த காலத்தில் உள்ளே இருக்கும் ஜாடராக்னி யும் பிரகாசமாக இருந்து வெளிச்சம் காட்டும்போது ஞானம் ஏற்பட்டு பகவானை நினைக்கவும், நாமாவைச் சொல்லவும் முடியும். இதோடுகூட இந்த ஜீவன் சரீரத்தை

விட்டுப் போகும் போது, அது சரியான காலமாகவும் இருக்க வேண்டுமாம்.

அதாவது, ஜாடராக்னியின் பிரகாசமும், வெளியில் சுக்ல பட்சமும், பகல் காலமாகவும், உத்தராயணத்தின் ஆறு மாதங்களில் ஏதாவது ஒரு மாதமாகவும் இருக்க வேண்டுமாம்.

பீஷ்மர் உத்தராயணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் என்று மகாபாரதத்தில் வருகிறது. அதனால் ஜீவன் சரீரத்தை விட்டுப் போகும் போது உள்ள கால விசேஷத்தைப் பொறுத்தே அந்த ஜீவன் பிரம்மத்தோடு சேர்ந்து விடுகிறதா அல்லது திரும்பவும் இங்கேயே வந்து ரேஷன் கார்டுக்கு பெயர் கொடுக்கிறதா என்பதைச் சொல்லி இருக்கிறார்கள்.

ஆகவே, யோகியாக உள்ளவர்களானாலும் இது போன்ற கால விசேஷங்களால்தான் பிரம்மத்தை அடைய முடியும். இந்த விசயத்தில் ஜீவனின் உள்ளே இருக்கும ஜாடராக்னி முதற்படி, அதன் பிரகாசம் இரண்டாவது படி, பகல் மூன்றாம் படி, சுக்லபட்சம் நான்காவது படி, உத்தராயணத்தின் ஒரு மாதம் கடைசி படி. இப்படி ஒவ்வொரு படியாக கால் வைத்து மேலேறி வந்தால் பிரம்மத்தை அடையலாம். பின்னர் இறங்க வேண்டிய தில்லை. இந்த ஐந்து படிகளைத்தான் பகவான் அர்ஜுனனுக்கு உபதேசம் செய்துள்ளார்.

மனிதனுக்கு ஞானம் ஏற்பட்டு ஞானியாகி மேலே சொல்லப்பட்ட ஐந்து படிகளைக் கடந்து பிரம்மத்தை அடைகிறான். பிறகு கீழே வருவதில்லை. இப்படிப் பட்ட காலத்தில் மரணமடைபவன் அர்ச்சிராதி மார்க்கம் என்று சொல்லப்பட்ட சுகமான மார்க்கத்தில் செல்கிறானாம். இவன் புண்ணியசாலியாம்.

அப்படி இல்லாமல் கடைசி காலத்தில் வாத ச்லேஷ்மத்தின் பெருக்கால் ஜாடராக்னி மங்கிப் போய், உள்ளே

இருள் சூழ்ந்து, இந்திரியங்கள் செயலிழந்து, ஞாபகம் என்பதே இல்லாமல் மயக்க நிலையில், மனம் தெளிவு இன்றி (ஏதேதோ பிதற்றிக் கொண்டு!) எங்கும் புகை போலத் தோன்றுமாம். எங்கே இருக்கிறோம், எப்படி இருக்கிறோம், பக்கத்தில் யார் இருக்கிறார்கள், சேர்த்து வைத்த சொத்துக்கு யார் யார் போட்டியிடுகிறார்கள் என்பதெல்லாம் எதுவுமே தெரியாதாம். இப்படி உள்ளே இருள் சூழ்ந்து கொண்டு வெளியே கிருட்டிணபட்சமும், ராத்திரி வேளையும், தட்சிணாயனத்தின் ஆறு மாதங் களில் ஒரு மாதமாகவும் இருந்தால், அவன் முன்பு யோகியாக இருந்தாலும் மரணத்துக்குப் பின் சந்திரலோகம் வரையில் போய் விட்டு மீண்டும் 'எங்கே போனாலும் இங்கேதானே வரணும்!' என்ற கதைதான். பிறவிதான்.

இப்படி சரியில்லாத காலத்தில் மரணமடைகிறவன் செல்லும் மார்க்கத்தை 'தூம்ர மார்க்கம்' என்றார்கள். அதாவது, 'அர்ச்சிராதி மார்க்கம்' பிரம்மத்திடம் கொண்டு சேர்க்கும். 'தூம்ர மார்க்கம்' என்பது திருப்பி அனுப்பிவிடும். என்ன சார் இது! அந்த மார்க்கத்தில் போவதும் இந்த மார்க்கத்தில் போவதும் நம் கையிலா இருக்கிறது? அது மரண காலத்தை அனுசரித்ததாயிற்றே! நாம் எப்படி தேர்ந்தெடுக்க முடியும்? என்றும் கேட்கலாம். அதற்குத்தான் கூடிய வரையில் புண்ணிய காரியங்களைச் செய், பகவானை வழிபடு, நல்லதை நினை, நல்லதைச் செய், நல்லதைப் பார்— என்றார்கள். சேற்றில் காலை வைத்தால் எங்கேயோ இழுத்துக் கொண்டுதான் போகும். நாம்தான் நிதானமாக காலை வைத்து ஊன்றி, ஜாக்கிரதை யாகப் போக வேண்டும். சம்சாரமாகிற சேற்றிலும் அப்படித்தான் ஜாக்கிரதையாக கால் வைத்துத் தாண்டிச் செல்ல வேண்டும். தாண்டிவிட்டால் சுகம்தான்! தாண்ட வேணுமே! ஆசாபாசம் பின்னாலிருந்து இழுக்கிறதே!

●

## 32. பிள்ளையாருக்கு தேங்காய் உடைப்பதாக வேண்டிக் கொள்கிறீர்களா?

பகவான், அவனிடம் நமக்குள்ள பக்தியையும், நம்பிக்கையையும் பார்த்துதான் அருள் செய்கிறான். நாம் ஏதோ ஒரு காரியம் நிறைவேற வேண்டுமானால், 'பகவானே! இது நன்றாக நடந்து விட்டால் உன் சந்நிதிக்கு வருகிறேன், அபிஷேகம் செய்கிறேன், அர்ச்சனை செய்கிறேன்,' என்றெல்லாம் பிரார்த்தித்துக் கொள்வதுண்டு. பகவானும் அதை நிறைவேற்றி வைக்கிறார். எதற்காக? இவனுடைய அர்ச்சனை தேங்காய் மூடிக்காகவோ, ஒரு ஆழாக்கு பால், தயிர் அபிஷேகத்துக்காகவோ அல்ல! இவனுக்குள்ள பக்தி நம்பிக்கைக்காக!

'பிள்ளையாரே! பரீட்சையில் பாஸ் செய்தா 100 தேங்காய் உடைக்கிறேன்,' என்று பிரார்த்தித்துக் கொள்கிறான். பிள்ளையாரும் அவனை பாஸ் செய்து வைக்கிறார். பிள்ளையாருக்கு நூறு தேங்காய் உடைக்க வேண்டுமே! 'இப்போ தேங்காய் விலை அதிகமாயிருக்கு. விலை குறையட்டும் பிறகு உடைக்கிறேன்,' என்கிறான்.

பக்தியோடும், நம்பிக்கையோடும் பிரார்த்தித்துக் கொண்டான். பாஸ் செய்து விட்டு நன்றாக இருக்கட்டும் என்றுதான் பிள்ளையார் நினைக்கிறார். 'எங்கேடா நூறு தேங்காய்?' என்று துரத்திக் கொண்டு வருவதில்லை. இதுதான் தெய்வத்தின் கருணை என்பது.

பண்டிகையின் போது வீட்டையெல்லாம் கணவன் சுத்தம் செய்கிறான். அலமாரி, மாடம் இதையெல்லாம் சுத்தம் செய்கிறான். பழைய தகர டப்பாவையெல்லாம் காலி செய்து வெளியே போடுகிறான். ஒரு தகர டப்பாவில்

முடிச்சு முடிச்சாக மஞ்சள் துணியில் காசு முடிந்து வைக்கப்பட்டிருக்கிறது. மொத்தம் பன்னிரெண்டு முடிச்சுகள். மனைவியை கூப்பிட்டு, 'இதெல்லாம் என்ன முடிச்சு? நிறைய இருக்கிறதே!' என்று கேட்கிறான்.

'அதுவா! திருப்பதிக்கு பிரார்த்தனை செய்து கொண்டு போட்டு வைத்த கால் ரூபாய் முடிச்சுகள். முன்பு உங்களுக்கு டைபாயிட் வந்த போது, 'ஏழுமலையானே! உடம்பு குணமாகிவிட்டால் திருப்பதிக்கு வருகிறேன்,' என்று பிரார்த்தனை செய்து கால் ரூபாயை மஞ்சள் துணியில் முடிச்சு போட்டு வெச்சேன். அப்புறம் நீங்க ஏதோ ஆபிஸ்லே ஆடிட்லே தகராறுன்னு கவலைப்பட்டபோது மறுபடியும் முடிச்சு போட்டு வெச்சேன், அப்புறம் நம்ம பெண் கல்யாணம் நல்லபடி நடந்துட்டா திருப்பதிக்கு வரோம்னு வேண்டி ஒரு கால் ரூபாயை முடிச்சு போட்டு வெச்சேன். இப்படி எதெதெற்கோ முடிச்சு முடிச்சா போட்டு வெச்சேன். எவ்வளவோ ரூபா செலவாகிறது. திருப்பதிக்குப் போய் இந்த முடிச்சையெல்லாம் உண்டியல்லே போட்டுட்டு வர்றதுக்கு வேளை வரவில்லை. எல்லாம் ஏழுமலையான் சித்தம்,' என்கிறாள்.

'ஓகோ! இதெல்லாம் பிரார்த்தனை முடிச்சா! சரி சரி! இப்போ இதுலே எவ்வளவு இருக்கு? முடிச்சையெல்லாம் அவிழ்த்துப் பார்க்கிறான் அவன். பனிரெண்டு முடிச்சு. பனிரெண்டு கால் ரூபாய். மொத்தம் மூணு ரூபாய் தேறியது. இதோ பார் இந்த மஞ்சள் துணியெல்லாம் இந்த டப்பாவிலேயே இருக்கட்டும். இப்போ இந்த மூணு ரூபாய்க்கு ஒரு கிலோ கத்தரிக்காய் வாங்கிண்டு வந்துடறேன். வேற காசு ஒண்ணும் கையிலே இல்லை. மறுபடியும் திருப்பதி போறபோது மூணு ரூபாயும், வட்டியுமா உண்டியலில் போட்டுடலாம்,' என்கிறான் கணவன்.

மூணு ரூபாய்க்கு கத்திரிக்காய் வாங்கி சாம்பார் வைத்து சாப்பிட்டாகி விட்டது. திருப்பதி போகத்தான் வேளை வரலை! பகவான் இதையெல்லாம் பொருட்படுத்துவதில்லை. பிரார்த்தனை செய்து கால் ரூபாயை முடிச்சு போட்டதுமே அதை ஏற்றுக் கொண்டு அருள் செய்து விட்டான். இருந்தாலும், நாம் சொன்ன வாக்கை காப்பாற்ற வேண்டாமா? அதனால் சொன்னபடி ரூபாயை உண்டியலில் சேர்த்து விட வேண்டும். சொன்னபடி செய்யாவிட்டால் அபசாரம் என்ற உணர்வு வேண்டும். அதனால்தான் பிரார்த்தனை செய்து கொண்டால் அதை நிறைவேற்ற வேண்டும் என்பார்கள். புரிகிறதா?

●

## 33. சொர்க்கத்திற்கு அட்மிசன் வேண்டுமா உங்களுக்கு ?

மனிதனின் அமைதியான வாழ்க்கையை கெடுக்கக் கூடியவை காமம், குரோதம், லோபம் என்ற மூன்றும் தான். இம்மூன்றும் ஒருவனிடமிருந்தால் அவை ஒவ்வொன்றும் அவனை ஒவ்வொரு விதத்தில் துன்பப் படுத்தும். இம்மூன்றையும் விட்டுவிட வேண்டும் என்று மகான்கள் கூறுவர். இம்மூன்றும் எங்கே நிலைப் பெற்றிருக்கிறதோ அங்கே கேடுகள் வந்து கூடுகின்றன.

சகல துக்கங்களையும் அனுபவிக்க வேண்டும் என்கிற எண்ணம் உள்ளவனிடம் இம்மூன்று குணங்களும் எப்போதும் இருக்கும். இந்த குணங்கள் உள்ளவர்களை இந்த குணங்களே நரகத்துக்கு அழைத்துச் செல்கின்றன.

பலரிடம் இந்த குணங்கள் அமைந்திருப்பதால்தான் நரகம் என்ற ஒன்று இவர்களுக்காக இருந்து கொண்டே இருக்கிறது.

இக்குணங்களால் வேதனைகளும், அபாயங்களும் சுலபமாக கிடைத்து விடும். அதனால் இந்த காம, குரோத, லோபம் என்கிற முக்குணங்களையும் எப்பாடு பட்டாவது விட்டொழிக்க வேண்டும். இப்படி இந்த குணங்களை எப்போது ஒருவன் விட்டு விடுவானோ அப்போது அவனுக்கு தர்ம, அர்த்த, காம, மோட்சம் என்ற நான்கு புருஷார்த்தங்களும் அடைய தகுதி பெற்ற வனாகிறான். எவன் தனக்கு நன்மை தேடிக் கொள்ள ஆசைப்படுவானோ, தன் வாழ்க்கை வீணாகக் கூடாது என்று விரும்புவானோ அவன் இந்த மூன்று குணங்களினின்றும் விடுபட வேண்டும். எப்படி ஒரு கருங்கல்லை கட்டிக் கொண்டு தண்ணீரில் நீந்தி கரை சேர முடியாதோ, எப்படி விஷம் உண்டபின் உயிர் வாழ முடியாதோ, அப்படியே காம, குரோத, லோபம் உள்ள வரையில் நன்மை பெற முடியாது.

எப்போது இம்மூன்று விலங்குகளும் தெறித்து போகிறதோ அப்போதுதான் அவன் சுகம்பெற முடியும். இந்த கப, வாத, பித்த தோஷத்திலிருந்து விடுபட்டவன் சரீரம் போலும், பிறர் தோஷம் கூறல், களவு செய்தல், வேசியின் உறவு இம்மூன்றும் இல்லாதவன் இவ்வுலகில் சுகமடைந்து, மோட்ச மார்க்கத்தில் செல்ல சாதுக்களின் துணை கொண்டு, அந்த சாது சங்கத்தின் பலத்தைப் பெற்று வேத சாஸ்திரங்களின் உதவியாலும், ஜனன மரண துக்கங்கள் நிறைந்த மணற்காட்டைத் தாண்டிப் போய், சர்வ விதமான ஆத்மானந்தத்தாலும், எப்போதும் நிறைந்திருக்கும் குரு கிருபையாலும் தாய் போன்ற தன்னாத்ம சுவரூபத்தைக் கண்டு, அதை கட்டிக் கொண்ட மாத்திரத்தில் இந்த சம்சார பந்தங்களும், மாயையும் அவனை விட்டு விலகிப் போகின்றன.

இப்படி எவன் காம, குரோத, லோபங்களை முற்றிலும் விட்டு விடுவானோ அவனே ஜனன, மரண, பிணி நீங்கி ஆத்மா சாபல்யமடைய முடியும் என்றார்கள். அல்ப விசயத்தில் கூட கோபம், விரோதமாகிற குரோதம், ஆசையின் காரணமாக லோபம் என்ற முக்குணங்கள் சுலபமாக ஒருவனிடம் தொத்திக் கொண்டிருக்கும். இவற்றை சிரமப்பட்டாவது, தியானத்தினாலாவது தான் ஒழிக்க முடியும். இப்படி ஒழித்து விட்ட புண்ணியாத்மாவுக்கு சொர்க்க வாசல் திறந்து வைக்கப் படுகிறது. 'வெல்கம்' போர்டு மாட்டியிருக்கும். இந்த முக்குணங்களை விடாதவர்களுக்கு 'நோ அட்மிசன்'.

## 34. மறுபிறவி எடுப்பதில் ஆர்வமா உங்களுக்கு ?

பிறவி என்பதில் மனிதப் பிறவி என்றும், இதர கீழ்த்தரமான பிராணிகள் என்றும் சொல்லப்படுகிறது. மனிதப் பிறவி உயர்ந்தது என்பார்கள். இவர்களில் மனித குணங்களோடு வாழ்பவனே உண்மையான மனிதன். இழிகுணம் படைத்தவர்கள் மனித மிருகங்கள். இழிவான பிறவிகளான நாய், நரி, பன்றி, புலி போன்ற ஜென்மா எப்படி எதனால் ஏற்படும் என்பதை பகவான் சொல்லி யிருக்கிறார்.

ஒரு சிலர் மந்திரம், மாந்திரீகம் என்று வைத்துக் கொண்டு, பிறரையும், நல்லவர்களையும் கெடுக்கவும், துன்பப்படுத்தவும் தங்கள் மந்திர, தந்திர, மாந்திரீக சக்தியை பயன்படுத்துகிறார்கள். ஏதோ அல்ப லாபத்துக் காகவோ, விரோத மனப்பான்மையுடனோ இதை செய்

கிறார்கள். ஆனால், இவர்களுக்கு என்ன கதி ஏற்படுகிறதென்பதை பகவான் சொல்கிறார்.

'என்னை பக்தி செய்யாமல் எந்த மனிதன் தன் தேகத்தின் உதவியைக் கொண்டு, பிற ஜனங்களிடம் துவேஷமும், பகையும் பாராட்டி அவர்களுக்கு தீங்கு விளைவிக்கிறார்களோ, அவர்களை, அவர்கள் பெற்றுள்ள மனித தேகத்தைப் பிடுங்கி விடுகிறேன். அவர்களை மிகவும் தாழ்ந்த ஈனமான பிறவிகளை அடையும்படி செய்கிறேன். பசியெடுத்தால் தின்பதற்கு எதுவும் கிடைக்காத காட்டுப் பிரதேசங்களில் வசிக்கும் புலி, சிங்கம், செந்நாய், தேள், பாம்பு போன்ற ஈனப் பிறவிகளை அடையும்படி செய்கிறேன்.

அப்படிப்பட்ட பாவ ஜென்மங்கள் பசிக்கு எதுவும் கிடைக்காமல் தன் சரீரத்தையேதான் பிடுங்கித் தின்னும் நிலை ஏற்படுகிறது. பிறகு இறந்து மீண்டும் மீண்டும் இதே போன்ற இழி பிறவியை அடைகிறது. சிலர் தங்களுடைய செயல்களாலே எரிச்சலை உண்டு பண்ணும் விஷப் பாம்புகளாகி, வளைகளுக்குள் அடைந்து கிடந்து, எல்லா காலங்களிலும் பயந்து பயந்தே வாழ்ந்து பின்னர் ஏதாவது ஒரு வகையில் கொல்லப்பட்டு மரணமடைந்து மீண்டும் இதே போன்ற பிறவிகள் பல எடுக்கிறார்கள்.

நொடி நேரம் கூட துக்கம், பயம் இன்றி வாழாமல் எப்போதுமே துக்கத்துடனும், பயத்துடனும் வாழ்கிறார்கள். இப்படி அவர்கள் பல பிறவிகள் எடுத்தும் கூட அவர்களது பாவம் தொலைவதில்லை. அவர்களுக்கு இன்னும் எத்தனையோ துக்க அனுபவங்கள் காத்துக் கொண்டிருக்கிறது. இதையெல்லாம் அனுபவித்த பின்னர் நரகம் என்று ஒன்று உண்டல்லவா! அந்த நரகத்தை அடைந்து பல காலம் அதில் உழன்று மீண்டும் ஈனப் பிறவியை அடைகிறார்கள். இவர்கள் எத்தனை பிறவிகளுக்குப் பின் கடைத்தேறுவார்கள் என்று சொல்ல முடியாது!

அதனால் நல்லவர்களுக்குக் கேடும், தீங்கும் செய்யும் இந்த துராத்மாக்களின் சகவாசமே கூடாது. அவர்கள் இருக்கும் பக்கம் கூட போகக்கூடாது. நல்லவர்களையே நாடிச் செல் என்றெல்லாம் பகவான் சொல்லியிருக்கிறார். கேடு விளைவிக்கும் சில விசயங்கள் ஆரம்பத்தில் பார்ப்பதற்கு வசீகரமாகத் தோன்றும். சுகம் போல் தோன்றும். அதில் மனதைப் பறிகொடுத்து விட்டால் பிறகு மனம் அதையே நாடும், தேடும். பின் மனம் அதிலேயே ஈடுபட்டுவிடும். மனதைத் திருப்பிக் கொண்டு வருவது சிரமம். இதுவே நல்ல விசயங்களில், சத் விசயங்களில் பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டு விட்டால் பிரச்னையே இல்லை. தனக்கும் மன அமைதியும், சாந்தமும் கிடைக்கும். பிறருக்கும் இவனால் எந்தவித துன்பமோ ஆபத்தோ இராது. பலர் இவனை புகழ்ந்து பேசுவார்கள். துன்மார்க்கனை இகழ்ந்து பேசுவார்கள். இப்படி இகழப்படுவதற்காகவும், ஈன ஜென்மம் எடுப்பதற்காகவுமா இந்த மனிதப் பிறவி கிடைத்தது? சந்தனம் கிடைத்தால் சரீரத்தில் பூசிக் கொள்ள வேண்டும். சுவரில் பூசுவார்களா? சிந்திக்க வேண்டும்.

## 35. மணலிலிருந்து எண்ணை எடுக்க முடியுமா?

மனிதர்களின் குணங்கள் பலவகைப்பட்டது. என்றாலும் அதில் சத்வ, ரஜச, தாமச குணங்கள் என்ற மூன்று வகையான குணங்களைக் கொண்டவர்களென்று வகுக்கப்பட்டுள்ளது.

சத்வ குணம் என்பது மிகவும் சாதுவான குணம். நியாயமாக நடப்பவன். இவர்களைப் பற்றி பிறகு பார்க்கலாம். அடுத்து ரஜோ குணமுள்ளவர்கள். அதாவது முரட்டு சுபாவம், மூர்க்கத்தனம் என்றெல்லாம் உள்ளவர்கள். இவர்கள் தன் தாய் தந்தையருக்கு எந்த விதமான உதவியும் செய்யாமல், அனுகூலமாக நடந்து கொள்ளாமல் ஊரிலுள்ள யாருக்கெல்லாமோ ஓடி ஓடி உதவி செய்வார்கள். அதிலேயே பெருமைப்பட்டுக் கொள்வார்கள். பெற்றோரை உதாசீனம் செய்துவிட்டு, அடுத்த வீட்டுக்காரரையும், கோடி வீட்டுக்காரரையும் உபசரிப்பார்கள். துளசி செடிக்கு ஒரு சொட்டு தண்ணீர் விடாமல் பனை மரத்துக்கு பால் விடுபவர்களைப் போன்றவர்கள்.

தான் செய்ய வேண்டிய நித்ய கர்மாக்களை விட்டு விட்டு, ஏதோ ஒரு லாபத்துக்காக, தன் பொருளையும், சரீர சக்தியையும் செலவிடுவார்கள். எவ்வளவுதான் பணமும், பொருளும் சேர்த்தாலும்கூட இன்னும் வேண்டும் இன்னும் வேண்டும் என்று பேராசைப் படுவார்கள்.

சபர்சவேதி என்ற கல் கையில் கிடைத்ததும் இரும்பை யெல்லாம் தங்கமாக மாற்றினாலும் மீண்டும் அந்த தங்கத்தைக் கொடுத்து இரும்பை வாங்கி வீடு நிறைய நிரப்பி வைப்பான். அவ்வளவையும் தங்கமாக மாற்றி விடவேண்டுமென்று ஆசைப்படுவான். அப்படிச் செய்த வுடன் சபர்சவேதி கல் காணாமல் போய்விடும். அப்போது தலையில் கையை வைத்துக் கொண்டு அழுவான். தான் எந்தக் கர்மாவைச் செய்தாலும் அதற்கு என்ன பலன் கிடைக்கும் என்றே யோசிப்பான். பெற்றோர், குரு இவர்களை நிந்திப்பான். யாரோ முன்பின் தெரியாதவர் களை சிலாகித்துப் பேசி இதனால் தனக்கு ஏதாவது பெருமையும், பொருளும் கிடைக்குமா என்று முயற்சி செய்வான்.

எப்படி ஒரு நாயானது ஒரு எலும்புத் துண்டுக்காக தெருத் தெருவாக அலைந்து ஒரு எலும்புத் துண்டு கிடைத்ததும் பரம சந்தோஷப்பட்டு அதையே கடித்துக் கொண்டிருக்குமோ அதுபோல இவனும் ஒரு அற்ப லாபத்துக்காக படாதபாடுபட்டு அதை அடைந்தபின் ஆனந்தப்பட்டுக் கொள்வான். காம்ய கர்மாக்களை செய்தே இவன் வாழ்நாள் வீணாகிறது என்பார்கள். தாமச குணம் என்றும் உள்ளது. இது மிக மட்டமான குணம் என்பார்கள். இந்த குணம் உள்ளவர்களும் உண்டு. சாஸ்திர விரோதமான காரியங்களையே இவர்கள் செய்துவிட்டு, அதுவே நியாயமானது என்றும் வாதாடு வார்கள். இவர்கள் செய்யும் கர்மாக்கள் எதுவுமே பயன் தராது!

மோரைக் கடைந்து வெண்ணை எடுக்க முயல்வது போலும், மணலை செக்கிலிட்டு ஆட்டி எண்ணை எடுக்க முயல்வது போலும், பலரை தூற்றிக் கொண்டிருப்பது போலும், ஆகாயத்தில் அம்பு எய்தி அதைத் துளைக்க முயல்வது போலும் இவர்களது கர்மாக்கள் எந்தப் பயனும் தராமல் போகும். இதனால் இவனது பொருளும் வீணாகும். சரீர சிரமமும் ஏற்படும். இதுதான் கண்ட பலன்.

ஒரு தடாகத்தில் தாமரை புஷ்பங்கள் நிறைந்திருந் தால் அவற்றை ஒரு வலை வீசி, சுருட்டி இழுத்தால் தாமரைகளும் நசுங்கி நாசமாகும். வலையும் அறுந்து பழுதாகிவிடும். பூ கிடைக்காது. அதுபோலத்தான் இவன் காரியங்களும் பயன் தராது போகும். தனக்கும் நஷ்டம், பிறருக்கும் கஷ்டம் ஏற்படுவதுதான் இவன் செய்யும் கர்மாவின் பலன். இப்படி ராஜச, தாமச குணவான்களைப் பற்றிச் சொல்லப்பட்டுள்ளது. நாம் எப்படி என்று யோசித்துப் பார்ப்பதும் நல்லது!

## 36. அரை மனதோடு அடுத்தவருக்கு உதவுபவரா நீங்கள்?

பகவானை நாம் நினைக்க வேண்டும். அதே சமயம் பகவானும் நம்மை நினைக்க வேண்டும். அருள் செய்ய வேண்டும் என்று அவனுக்குத் தோன்ற வேண்டும். அருள் செய்ய வேண்டும் என்று அவன் நினைத்தாலும் கூட இவனுக்குள்ள பாக்கியம் அல்லது புண்ணியம் எப்படி இருக்கிறதோ அதற்குத் தகுந்தபடிதான் அவனது அருளும் இருக்கும்.

சுதாமா என்ற குசேலர் பகவானுக்கு ஆப்தர். இருவரும் பால்ய சினேகிதர்கள். ஒன்றாக குருகுல வாசம் செய்தவர்கள். கிருஷ்ணன் ருக்மணியுடன் துவாரகையில் இருந்தார். அதே சமயம் இந்த குசேலர் (இவரது பெயர் சுதாமா. இவருடைய ஆடை சுத்த கந்தலாக இருக்குமாம். கந்தல் துணியை குசேலம் என்பார்களாம். அதனால் இவருக்கு குசேலர் என்ற பெயர் வந்ததாம்!) இவர் பரம ஏழை. ஆனாலும் தினமும் காலையில் எழுந்ததும் பகவான் கிருஷ்ணனை தியானம் செய்வதுண்டு.

ருக்மணி தேவிக்கு இந்த குசேலரிடம் ஒருவித பரிவு ஏற்பட்டது. பகவானை பார்த்து, 'இந்த குசேலர் உங்களுடைய நண்பராயிற்றே! தினமும் உங்களையே தியானம் செய்கிறாரே! பால்ய நண்பர். ஒன்றாகப் படித்தவர். பரம சாது. இப்படிப்பட்டவர் ஏழ்மை நிலையில் சிரமப்படுகிறாரே! இது உங்களுக்குத் தெரியாத விசயமா? அவருக்கு அனுக்கிரகம் செய்யக்கூடாதா?' என்று கேட்டாளாம்.

அதற்கு பகவான், 'ருக்மணி! நான் தினமும் காலையில் எழுந்ததும் என்னுடைய பக்தர்கள் யார் யார் என்று எண்ணிப் பார்ப்பதுண்டு. அதில் இந்த குசேலரும் இருப்பார். யார் யார் என்னிடம் வரப்போகிறார்கள் என்று எண்ணிப் பார்ப்பேன். வேறு யார் யாரோ வரப்போவது தெரியும். ஆனால், குசேலர் வருகிற மாதிரி தெரிவதில்லை. அவர் வரும்போது அனுக்கிரகம் செய்வேன். ஆனால், ஒரு விசயம் தெரிந்து கொள். இந்த குசேலன், முன் ஜென்மத்தில் பெரிய பணக்காரனாக இருந்தான். பணத்தை நிறைய செலவு செய்தான். ஆனால், நல்ல காரியங்களுக்கோ, தர்ம காரியங்களுக்கோ ஒரு பைசாகூட செலவு செய்தது இல்லை. எல்லாமே அவனுடைய சுகபோகத்துக்கும், ஆடம்பரத்துக்குமேதான் செலவுசெய்தான் தான தர்மம் என்று எதுவுமே செய்யவில்லை. அதனால்தான் இந்த ஜென்மத்தில் பரம தரித்திரனாக இருக்கிறான். அதற்கு நான் என்ன செய்ய முடியும்?' என்றார்.

அதன் பிறகு நடந்த குசேலர் சரித்திரம்தான் உங்களுக்குத் தெரியுமே! பகவானை தரிசித்த பிறகு இவரது தரித்திரம் தொலைந்து சுகப்பட்டார்.

இங்கு கவனிக்க வேண்டிய விசயம் என்னவென்றால் பணக்காரனாக இருப்பது என்பது பூர்வஜென்ம புண்ணியத்தால் ஏற்படுவது. அந்த சமயம் தன்னிடமுள்ள செல்வத்தை ஓரளவாவது தான, தர்மங்களுக்கு செலவிட வேண்டும். அதுவும் முழு மனதோடு செய்ய வேண்டும். மனமில்லாமல் செய்யும் தர்மத்துக்கு பலன் கிடையாது. பணமும் நஷ்டம், புண்ணியமும் நஷ்டம். அதனால் வசதி உள்ள போதே எந்த அளவுக்கு தான, தர்மம் செய்ய முடியுமோ அதைச் செய்து விடு என்றார்கள்.

எதாவது கொடுப்பதாக இருந்தால் உடனே கொடுத்து விடு. நாளைக்கு வா. அடுத்த வாரம் வா என்று சொல்லாதே என்றார்கள். நாளைக்கு என்றால்

கொடுப்பவனோ, வாங்குபவனோ இருப்பான் என்பது என்ன நிச்சயம்? அதோடு இன்றைக்கு உள்ள மனம் நாளைக்கு எப்படி மாறும் என்றும் சொல்ல முடியாதே! 'நல்ல காரியத்தை உடனே செய். தகாத காரியத்தை உடனே தள்ளிப்போடு,' என்றார்கள். கோயில் கும்பாபிஷேகம் என்று வசூலுக்கு வருகிறார்கள். முடிந்த அளவு உடனே கொடுத்தால் அந்தப் பணம் குப்பாபிஷேகத் துக்கு உதவும். ஓரளவு புண்ணியம் கிடைக்கும். கும்பாபிஷேகமும் முடிந்து மண்டலாபிஷேகமும் முடிந்த பிறகு பணம் கொடுத்தால் அது எதற்குப் பயன்படுகிறது என்று சொல்ல முடியுமா? அந்தந்த சமயத்தில் செய்துவிட வேண்டும்! அதுதான் தர்மம்!

## 37. பகவானை திருப்திபடுத்த விருப்பமா உங்களுக்கு?

பகவானுடைய கிருபையினால்தான் மனிதன் பலவித சுகபோகங்களுடன் வாழ்கிறான். அவனைத்தான் 'வாழ வைக்கும் தெய்வம்' என்று குறிப்பிடலாம். இப்படி உள்ள தெய்வத்துக்கு நன்றி செலுத்த வேண்டியது கடமை அல்லவா!

தெய்வத்துக்கு நன்றி செலுத்துவது என்பது சிரமமான காரியமே அல்ல. தினமும் ஒருமுறை பூஜை செய்தாலே போதும். இதை நித்ய கர்மாவாக நினைத்து செய்து வந்தால் வாழ்க்கை வண்டி சுகமாக ஓடிக் கொண்டிருக்கும். இடையில் ஏதாவது மேடு, பள்ளம் வந்தாலும் சும்மா ஒரு குலுக்கலோடு போய்விடும். இப்படி பூஜிப்பவன்

விரும்பியவைகளை அடைவான். எந்த தெய்வத்தை பூஜிக்கலாம் என்று யோசித்து மூளையை குழப்பிக் கொள்ள வேண்டியதில்லை. கணபதி, கந்தன், சூரியன், சரஸ்வதி, கவுரி, சிவன், லட்சுமி, லட்சுமிபதி (விஷ்ணு) போன்ற எந்த தெய்வமாகவும் இருக்கலாம். யாரையாவது பூஜிப்பது நல்லது. எல்லாவற்றையுமே பூஜிப்பது நல்லது. இது சிரமம் என்பதால் ஏதோ ஒரு இஷ்ட தெய்வத்தை பூஜித்தாலே போதும் என்றார்கள்.

தெய்வ சிந்தனையும், தெய்வ பக்தியும்தான் பிரதானம். பிம்பங்கள், படங்கள், யந்த்ரங்கள் இவை களுக்கு பிரதி தினம் ஸ்நானம் செய்விக்க வேண்டிய தில்லை.

பூஜையை சிரத்தையுடன் செய்ய வேண்டும். தினமும் வயிற்று பூஜை செய்வது போல் தெய்வ பூஜையும் முக்கியம் என்று ஒருவர் சொன்னார். வயிற்று பூஜைக்கு ஆதாரம் தெய்வ பூஜை! பூஜைக்கு உலோகத்தாலான பிம்பம் சொல்லப்பட்டுள்ளது. அல்லது சாளக்ராமம் சிவபூஜைக்கு சிவலிங்கம். குங்குமம், அகில், கஸ்தூரி, சந்தனம் இவற்றால் விஷ்ணு பிம்பத்தை பக்தியுடன் பூஜிக்கிறவன் சொர்க்கத்தில் கோடி கல்ப காலம் வசிப்பான். வாசனை வஸ்துக்களில் சந்தனம், அகில், கருப்பகில், குங்குமப்பூ, இவை ஒன்றை விட ஒன்று அதிக புண்ணியமானது. ஜாதி மல்லிகை, காட்டு மல்லிகை, காட்டு முல்லை, பாதிரி, அரளி, செம்பருத்தி, செவ்வந்தி, மலை மல்லி, குறிஞ்சி, புன்னை, செண்பகம் போன்ற புஷ்பங்களும், வில்வம், வன்னி, துளசி, கரிசாலை, கருந்துளசி, பச்சிலை ஆகிய பத்திரங்களும் விஷ்ணுவுக்கு பிரியமானவைகளாம். வெண் தாமரை, செந்தாமரை, நீர்க்கடம்பு, மருதை, கடம்பு, மகிழ், செங்கழுநீர் இவற்றின் புஷ்பங்களால் அர்ச்சித்தால் விஷ்ணுலோகத்தில் சிறப்பு பெறுவான். சுவர்ணம், ரத்னம், பவழம் இவைகளால் செய்த புஷ்பங்களாலும்,

வஸ்த்ரம், புஷ்பம் முதலியவற்றாலும் அர்ச்சிப்பவன் முக்தியடைகிறான்.

துளசியினால் விஷ்ணு பிம்பத்தைச் சுற்றிலும் இடைவெளியில்லாமல் அர்ச்சிப்பவன் எல்லையில்லாத பயனையடைவான். சாளக்ராமத்தின் மேல் ஒரு துளசி தளம் சமர்ப்பித்தால் சகல பாவங்களும் அகலும். இப்படி நிறையச் சொல்லியிருக்கிறார்கள்.

இதே போல் சிவபூஜை குறித்தும் சொல்லப் பட்டுள்ளது. நிறைய செய்தாலும், முடிந்த அளவு செய்தாலும், பக்தி பூர்வமாக செய்துவிட்டால் போதும். பகவான் திருப்தியடைகிறான். மனிதர்களை திருப்தி செய்வதை விட பகவானை திருப்தி செய்வது சுலபம். நமக்கும் இதில் சிரத்தை இருக்க வேண்டும்.

## 38. இரவு நேரத்தில் தயிர் சாப்பிடலாமா?

"ஓ ராமா நீ நாமம் எந்த ருசிரா, ஏமி ருசிரா, பலே மஞ்சி ருசிரா" என்று பாடினார் ஒரு பக்தர். ராம நாமா வில் அவருக்கு அவ்வளவு ருசி. இது பக்தி விசயம். இது இப்படியே இருக்கட்டும். சாப்பாட்டு விசயத்திலும் கூட பலர், சாப்பாடு, விருந்து சாப்பிட்ட பிறகு, "ஆகா என்ன ருசி, என்ன ருசி!" என்று புகழ்ந்து பேசுவதைப் பார்த்திருக் கிறோமல்லவா! இந்த சாப்பாட்டு வகைகளில் அவர்கள் ருசியைக் கண்டு சந்தோஷப்படுகிறார்கள். ஆனால், இந்த சாப்பாட்டு விசயத்திலும் சில கட்டுப்பாடுகள், நியமம் இவைகளை சொல்லியிருக்கிறார்கள் நமது முன்னோர்கள்.

சாப்பிடுவது என்பதற்கு காலம், அகாலம் என்று கால நிர்ணயம் உண்டு. இரவு பதினோரு மணியாகி விட்டால் அதன் பிறகு சாப்பாடு சாப்பிடுவதில்லை. அதே போல் பகல் மூன்று, நான்கு மணிக்கு மேல் சாப்பிடுவதில்லை. அவசியமானால் ஏதாவது மோர் அல்லது சொல்ப பலகாரம்தான்.

காய்கறி வகைகளிலும் கூட சிலவற்றை ஒதுக்கியுள்ளார்கள். சிலவற்றை சில நாட்களில்தான் சாப்பிடலாமென்று சொல்லியிருக்கிறார்கள். அகத்திக் கீரை சத்துள்ள கீரைதான். ஆனால், அதை துவாதசி அன்று மட்டுமே சாப்பிடலாமென்று வைத்திருக்கிறார்கள். அன்றைய தினம் கத்தரிக்காய் சேர்க்கக்கூடாது என்றார்கள். பிரதமை முதல் சப்தமி வரையில், உள்ள ஏழு திதிகளில் முறையே பூசணி, கத்தரி, அல்லது கண்டங்கத்தரி, கத்தாழை, முள்ளங்கி, பில்வப் பழம், புடல், நெல்லிக்காய் இவை[illegible] உண்ணக்கூடாது.

துவா

[illegible]ஷ்டமி முதல் பர்வம் வரை, உள்ள திதிகளில் முறையே யானைத் திப்பிலி, கபாலி, ஆர்த்ரம், சங்குநகம், பூர்ஜபத்ரம், எள், புளி, நெல்லிக்காய் இவைகளை உபயோகிக்கக் கூடாதாம் (இதில் சில பெயர்கள் நமக்கு பரிச்சயமில்லை!)

இருமுறை பாகம் செய்யப்பட்ட அன்னத்தையும், தென்னையின் ஈசத்தையும், பூமி சம்பந்தமில்லாத ஜலத்தையும் உபயோகிக்கக் கூடாது.

உப்பு கலந்த பாலையும், எச்சில் செய்த நெய்யையும் குடிக்கக் கூடாதாம். தாமிர பாத்திரத்தில் பால், தயிர், நெய், மோர் இவைகளை சாப்பிடக் கூடாது.

பகலில் விளா மரத்தின் நிழலிலும், இரவில் தயிர், வன்னிமரம் இவைகளிலும், சப்தமியில் நெல்லிக்காயிலும்

'அக்கா' வாசம் செய்கிறாளாம். இரவில் நெல்லிக்கனி கூடாது. பகலில் முட்டைப் பொரியையும், இரவில் தயிர், நெல் வறுத்த மாவு இவைகளை உட்கொள்ளக் கூடாது.

எள்ளுடன் கூடிய எந்த வஸ்துவையும் சூரிய அஸ்தமத்துக்குப் பின் சாப்பிடக் கூடாது. இஞ்சி, தயிர், கஞ்சி, எள்ளு, சரகம் ஆகியவற்றை இரவில் புசிப்பவன், ரூபம், வாக்கு, லட்சுமி கடாட்சம் இழந்து விடுவானாம். வெண்கலப் பாத்திரத்திலுள்ள இளநீர், தாமிர பாத்திரத்திலுள்ள தேன், நெய் தவிர, பால், தயிர், மோர் சாப்பிடக்கூடாது. வெளியில் புறப்படும் சமயத்திலும், ராத்திரியிலும் தயிரை குடிக்கக்கூடாது.

●

## 39. ரேஷன் கடையில் அரிசி வாங்குபவரா நீங்கள்?

ஆசாரம், அநாசாரம் என்று இரண்டை சொல்லி இருக்கிறார்கள். ஆசாரம் என்பது எது எதை எப்போது எப்படிச் செய்ய வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளதோ அதன்படி செய்வது. அநாசாரம் என்பது எதையெல்லாம் செய்யக் கூடாது என்று சொல்லப்பட்டுள்ளதோ அதை செய்வது.

ஆசாரத்தை அனுஷ்டிப்பவர்களுக்கு சரீர சுத்தியும், சித்த சுத்தியும் ஏற்படுகிறது. அநாசாரனுக்கு இரண்டு மில்லை.

சூரியாஸ்தமனத்திற்குப் பிறகு நதியில் குளிக்கக் கூடாது. ஒரு நதியில் குளிக்கும்போது மற்றொரு நதியை புகழக் கூடாது. புகழ்ந்தால் நதியில் குளித்த புண்ணியம் நஷ்டமாகிறது.

முறத்தின் காற்று, பிறர் நகத்தின் நுனி நீர், ஸ்நானம் செய்தவருடைய வஸ்திரத்திலிருந்து விழும் நீர், நிரம்பிய குடத்திலிருந்து தெளிக்கும் நீர்த்துளிகள், துடைப்பத்தி லிருந்து எழும் புழுதி, பிறர் தலை முடியிலிருந்து தெறிக்கும் நீர் இவை மேலே பட்டால் நம் புண்ணியமெல்லாம் நாசமாகும் என்றார்கள். இந்த மாதிரி சாதாரணமாக வீடுகளில் நடக்கும்.

ரேஷன் அரிசியை வாங்கி வந்து முறத்தில் போட்டு புடைத்துக் கொண்டிருப்பாள் மனைவி. புருஷன் எதிரில் உட்கார்ந்து கொண்டு அளந்து போடுவான். அப்போது முறத்தின் காற்று இவன் மேல் வீசிக் கொண்டிருக்கும்.

சிலர் கையை அலம்பிவிட்டு விரல்களை உதறுவார்கள். உதறும்போது கைவிரல்களின் நுனியில் உள்ள நீர் நம் மீது தெறிக்கும். தாத்தாவோ, மாமாவோ குளித்து விட்டு வேட்டியை துவைத்து பிழிந்து விட்டு நாம் இருக்கும் இடத்தில் வந்து நின்று கொண்டு வேட்டியை டப், டப் என்று உதறுவார். அப்போது அந்த ஈர வேட்டியிலிருந்து நீர்த் துளிகள் நம்மீது விழும். மனைவியோ யாரோ குடத்து நிறைய தண்ணீர் எடுத்துக் கொண்டு டக், டக் கென்று வரும்போது அந்த குடத்து தண்ணீர் திவலைகள் நம்மீது விழலாம். நாம் உட்கார்ந்திருக்கும் போது மனைவியோ, வேலைக்காரியோ, வீடு பெருக்குவாள். துடைப்பத்திலிருந்து புழுதி கிளம்பி நம்மீது படியும். சிலர், குளித்துவிட்டு உள்ளே வந்து தலைமுடியை அவிழ்த்து விட்டு சடேர், சடேர் என்று அதை உதறுவார்கள். தெறிக்கும் நீர் பக்கத்தில் இருப்பவர்கள் மீது விழும்.

இதெல்லாம் அறியாமையினாலும், அஜாக்கிரதையாலும் நடைபெறுகின்றன. ஆனால், இவை யார் மீது பட்டாலும் அவர்களின் புண்ணியம் அனைத்தும் நாசமாகி விடும். புண்ணியம் சம்பாதிப்பது சிரமம். போக்கிக் கொள்வது எவ்வளவு சுலபம் பாருங்கள். அதனால் கொஞ்சமாவது சாஸ்திரப்படி நடந்து கொள்ளலாமே! முடியுமா பாருங்கள்!

## 40. நகரவாசிகளே... அவசியம் படியுங்கள் இதை!

தினமும் பொழுது விடிகிறது. பொழுது போகிறது. வாழ்வின் ஒரு நாள் முடிந்து விடுகிறது. ஆனால், இந்த ஒரு நாள் எப்படிப் போயிற்று என்பதுதான் சிந்திக்க வேண்டிய விசயம்.

குடும்பத்துக்கு உபயோகமான காரியமாகவோ ஆத்ம லாபத்துக்கு உதவும் காரியமாகவோ அது இருக்க வேண்டும்.

நகரத்திலிருந்த ஒருவர் ஒரு கிராமத்துக்குப் போனார். நாகரிகம் தெரியாத படுகிராமம் அது. அங்கே ஒரு வீட்டில் பல பெரியோர்கள், வித்வான்கள் கூடி பேசிக் கொண்டிருந்தனர். வம்பு பேசவில்லை. வேதாந்த விசாரம் செய்து கொண்டிருந்தார்கள். இவன் அங்கு போய் நின்றான். தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான். பிறகு நீங்கள் எல்லாரும் ஒவ்வொரு

நாளையும் எப்படி செலவழிக்கிறீர்கள் என்று கேட்டான். அதற்கு அவர்கள், ''நாங்கள் விடியற்காலையில் எழுந்து ஆசார அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, காலையில் 'பெண்ணை திருடியவன்' கதையையும், பகலில் 'சூதாடியவர்களின்' கதையையும், இரவில் 'வெண்ணை திருடியவன்' கதையையும் படிப்போம். நடுவில் வேத பாராயணமும் உண்டு,'' என்றார்கள்.

இவனுக்கு ஒன்றும் புரியவில்லை. திருடனின் கதையையும், சூதாடிகளின் கதையையும் அவர்கள் ஏன் படிக்கிறார்கள்? ஏதாவது செய்திப் பத்திரிகைகளை வாங்கி ஒரு எழுத்து விடாமல் படிக்கிறார்களோ, அதில் தானே இந்த மாதிரி கதையெல்லாம் வரும்? என்று யோசித்தான். பிறகு அவர்களையே கேட்டு விடலாம் என்று தோன்றியது. ''ஐயா! திருடன் கதை, சூதாடிகளின் கதையைப் படிப்பதாகச் சொன்னீர்களே! இந்தக் கதையெல்லாம் உங்களுக்கு எதற்கு? கொஞ்சம் விளக்கமாகச் சொல்லுங்களேன்,'' என்றான்.

அவர்கள் சிரித்துவிட்டு, ''தம்பீ! பெண்ணை திருடியவன் கதை என்றால் சீதையை திருடின ராவணன் கதை— அதுதான் ராமாயணம். சூதாடிகளின் கதை என்றால் பாண்டவர்— கவுரவர் கதை— அதுதான் பாரதம். வெண்ணை திருடியவன் கதை என்றால் கிருஷ்ணன் கதை— அதுதான் பாகவதம். நாங்கள் காலையில் ராமாயணம், பகலில் பாரதம், இரவில் பாகவதம் புராணங்களை படிப்பது வழக்கம். இப்படித் தான் பொழுதைக் கழிக்கிறோம்,'' என்று சொல்லிவிட்டு, ''ஆமாம்! நகரத்தில் நீ எப்படி பொழுதை போக்கு கிறாய்?'' என்று கேட்டார்கள்.

அதற்கு அவன், ''ஓ! அதுவா! காலையில் எழுந்ததும் காபி, பிறகு முகச்சவரம், பிறகு பேப்பர் படிப்பது, அதன்

பின் குளியல், உடன் சாப்பிட்டுவிட்டு, டிபன் பாக்சை தூக்கிக் கொண்டு பஸ் அல்லது ரயிலில் இடிபட்டும், தொங்கிக் கொண்டும் ஆபிஸ் போய், மாலையில் மீண்டும் இடிபட்டு, தொங்கிக் கொண்டு வீட்டுக்கு சோர்ந்து போய் வருவோம். பிறகு ஏதோ டிபன், காபி, அப்புறம் 'டிவி' பார்த்துவிட்டு சாப்பிட்டுவிட்டு தூங்கப் போவோம். இப்படியே பொழுது போகிறது'' என்றான்.

''அது சரி! நீ குடும்பத்துக்காக உழைக்கிறாய். அதுவும் நல்லது தான். ஆனால், உனக்காக, உன் ஆன்ம லாபத்துக்காக என்ன செய்கிறாய் என்று சொல்ல முடியுமா?'' என்று அவர்கள் கேட்டார்கள்.

இவன் தலையை சொரிந்துகொண்டு, ''அப்படி ஒன்றும் செய்யவில்லையே,'' என்றான்.

அவர்கள், ''அப்படிச் சொல்லக் கூடாது. வீடு, வாசல், குடும்பம் எல்லாம் வேண்டியதுதான். அவர்களுக்காக உழைக்க வேண்டியதுதான். ஆனால், கூடவே உனக்கு இதமான, ஆத்ம லாபத்துக்கும் ஏதாவது தெய்வ வழிபாடு, தியானம், ஜெபம், வேதம், சாஸ்திரம் இவைகளையும் தெரிந்துகொண்டு கடைபிடிக்க வேண்டுமப்பா! இதுதான் உனக்கு சுகமளிக்கும்,'' என்றார்கள்.

''அப்படியே செய்கிறேன்!'' என்று சொல்லிவிட்டுப் போனானாம் அவன். அப்புறம் என்ன செய்தானோ தெரியவில்லை.

## 41. அபிஷேக பலன்கள் தெரியுமா உங்களுக்கு?

விஷ்ணுவை அலங்காரப் பிரியர் என்றும், சிவனை அபிஷேகப் பிரியர் என்றும் சொல்வதுண்டு. விஷ்ணுவை ஆடை ஆபரணங்களாலும், மாலைகளாலும் அலங்காரம் செய்தால் அவர் சந்தோஷப்படுவார். சிவன் அபிஷேகத்தினால் சந்தோஷப்படுவார். குடம் குடமாக பால், தயிர், பன்னீர், சந்தனம் என்று அபிஷேகம் செய்வார்கள். பார்த்திருக்கலாம். இந்த அபிஷேக தீர்த்தம் புனிதமானது என்பார்கள். கங்கா தீர்த்தம் ஏன் விசேஷமானது, புண்ணியமானது என்றால் அது பகவானுடைய சம்பந்தம் பெற்றிருப்பதால்தான். இந்த சிவனுக்கு அபிஷேகம் என்பதை சாதாரணமாக வீடுகளில் செய்ய முடியாது. அதனால் ஆலயங்களில் பெரிய அளவில் செய்வார்கள். அதில் நாமும் கலந்து கொண்டு அபிஷேக சாமான்களை கொடுத்தாலும்கூட அபிஷேகம் செய்த புண்ணியம் கிடைக்கும்.

சிவலிங்கத்துக்கு பால் அபிஷேகம் செய்தால், நன்றாக கறக்கும் பதினாயிரம் பசுக்களை, பொன் வஸ்திரத்துடன், வேதியனுக்கு தானம் செய்த புண்ணியம் கிடைக்குமாம். தயிர் அபிஷேகம் செய்தால் தன் ஏழு குலங்களை எழுப்பி, சிவலோகத்தில் போற்றப்படுகிறான். அவனது பாவங்கள் அனைத்தும் தொலைகிறதாம். நெய்யினால் அபிஷேகம் செய்தால் ஆயிரம் கோடி கல்பங்களில் செய்த பாவங்கள் அனைத்தும் நாசமாகிறதாம். ஒரு மாத காலம் நெய் அபிஷேகம் செய்தால் 210 குலங்களுடன் ஈஸ்வரனை அடைகிறான்.

ஒரு தடவை தேன் அபிஷேகம் செய்தால் பாவ மூட்டைகள் கழன்று விழுந்து விடும். அக்னி லோகத்தில் போற்றப்படுகிறான். கரும்பு சாற்றினால் அபிஷேகம் செய்பவன், சகல அபீஷ்டங்களும் கைகூடி வித்யாதர ஸ்தானத்தை அடைகிறான். பால், தயிர், தேன், சர்க்கரை இவற்றால் மந்திரங்களுடன் சிவனை ஸ்நானம் செய்வித்தால் சந்தேகமின்றி முக்தியடைகிறான். காராம் பசுவின் பஞ்ச கவ்யத்தால் அபிஷேகம் செய்தால் நூறு மடங்கு புண்ணியம் அதிகம். சுத்தமான எள்ளெண்ணை யால் சிவனுக்கு அபிஷேகம் செய்தவன் கைலாசத்தை அடைகிறான். வாசனையுடன் கூடிய சந்தன அபிஷேகம் செய்தவன் கந்தர்வலோகத்தை அடைவான். கந்தர்வர் களால் பூஜிக்கப்படுவான்.

பன்னீரால் அபிஷேகம் செய்தால் குபேரனின் பதத்தை அடைவான். குங்குமப் பூ கலந்த தீர்த்தத்தினால் அபிஷேகம் செய்தால் சமர்த்தியான சம்பத்தை அடைவான். பழரச அபிஷேகம் சிவலோகத்தில் சந்தோஷ மாக இருக்க வழி செய்யும். நெய்யுடன் கூடிய குங்கிலியத் தால் தூபத்தையும், நெய் தீபத்தையும் சமர்ப்பிப்பவன் நரக துக்கத்தை தொலைத்து சிவலோகத்தில் சிறப்புறுவான். நைவேத்தியத்தில் எவ்வளவு அரிசி உள்ளதோ அவ்வளவு ஆயிரம் யுகங்கள் சொர்க்கத்தில் சுகம் பெறுவான்.

பால், வெல்லம், அரிசி, பழம் இவைகளைச் சேர்த்து பாயசம் செய்து நைவேத்யம் செய்தால் தேவர்கள் சந்தோஷமும், திருப்தியும் அடைவார்கள். இப்படி யெல்லாம் சொல்லப்பட்டுள்ளது. சாதாரண குடும்பஸ்தன் குடம் குடமாகவோ, அதிக அளவிலோ இதையெல்லாம் செய்ய முடியாவிட்டாலும் மனமுவந்து கொஞ்சம் கொடுத்தாலும் போதும். பலன் உண்டு. கோயிலுக்கு தானே, இது போதும் என்று இரண்டு ஸ்பூன் எண்ணையை

ஒரு சின்ன கிண்ணத்தில் எடுத்துக் கொண்டு போய் கொடுத்தால் அது சரியல்ல. முடிந்த அளவு தாராளமும் வேண்டும். வீட்டில் நெய் கொஞ்சம் நாற்றம் வீச ஆரம்பித்தால், மூக்கைப் பிடித்துக் கொண்டு அந்த நெய்யை கோயில் விளக்கில் கொண்டு போய் விட்டு விடுவார்கள் சிலர். இது சரியல்ல! நமக்கே பிடிக்காத போது பகவான் அதை ஏற்றுக் கொள்வாரா? அவரும் தான் மூக்கை பிடித்துக் கொள்வார். அது நமக்குத் தெரியாது! அவ்வளவுதான். பகவானுக்கு எப்போதும் உயர்ந்த, நல்ல பொருளை சமர்ப்பிக்க வேண்டும். முழு மனதுடன் செய்ய வேண்டும்! - மனசு வருமா? வரணும் சார்!

## 42. உங்களுக்காக காத்துக் கொண்டிருக்கிறார் ஒருவர்!

இவ்வுலகில் எல்லாருமே சுயலாபத்துக்காகவே பாடுபடு கிறார்கள். பகவான் ஒருவன்தான் ஆபத்துக் காலத்தில் நம்மை காக்க, தன் உயர்ந்த ஸ்தானத்தை விட்டு கீழே இறங்கி ஓடி வருகிறான். ஆகவே, பகவானுடைய கருணையை நாம் பெற வேண்டும். சொந்த, பந்தங்களை நம்பியிருப்பது விவேகமானதல்ல.

கிருஷ்ணன் தன் அவதார காரியம் முடிந்து வைகுந்தம் செல்லும்போது தன்னிடம் அதிக பக்தி கொண்டிருந்த உத்தவர் என்பவரிடம், 'உத்தவரே! நீர் பத்ரிகாச்ரமம் போய், புலன்களை வசப்படுத்தி, புத்தியை ஓரிடத்தில் வைத்து நான் உபதேசித்துள்ள ஆத்ம ஞானத்தை சிந்தனை

செய்து என்னிடத்தில் மனதை நிலைக்கச் செய். அப்போது நீ என்னை அடைவாய். நீ என்னோடுகூட இங்கு வரவில்லை. அதேபோல் நான் போகும்போது நீயும் என்னுடன் வரமுடியாது. ஒவ்வொருவரும் தனித் தனியாகவே வருகிறார்கள். தனித்தனியாகவே போகிறார் கள். யார் யார் எங்கிருந்து வருகிறார்கள், எங்கே போகிறார்கள் என்பது ஒருவருக்கும் தெரியாது. அப்படி யிருக்கும்போது, மனிதர்கள், சொந்தம், பந்தம், உறவு, நண்பர்கள் என்று சொல்லிக் கொண்டு அலைகிறார்கள். இதெல்லாம் அஞ்ஞானத்தினால் ஏற்படுகிறது. ஈசுவரனை தவிர ஜீவனுக்கு வேறு கதியோ, துணையோ கிடையாது. உலகில் காண்பதும், அனுபவிப்பதும் எல்லாமே கனவு போன்றதுதான். பகவான் ஒருவனே உண்மைப் பொருள். ஆகவே, சதா காலமும் தியானத்தில் அமர்ந்து உள்ளத்தில் என்னையே நினைத்து வழிபட்டு வா. காலம் வரும் போது நீ என்னை வந்தடைவாய்,' என்று உபதேசம் செய்தார். உத்தவரும் அப்படியே தவம் செய்து பகவானை அடைந்தார் என்றெல்லாம் புராணங்களில் உள்ளது.

பகவானிடமிருந்து வந்த ஜீவன் மீண்டும் பகவானையே அடையவேண்டும். அதற்கு பக்தி ஒன்று தான் வழி. பகவானோடு ஒரு பிடிப்பு இருந்தால் போதும். அவனும் நம்மைப் பிடித்துக் கொள்வான். நாம் கை நீட்டினால் அவனும் கை கொடுப்பான்.

மனிதனாகப் பிறந்து விட்டவன், உலக சுகங்களையே பெரிதாக நினைக்காமல் ஆன்ம சுகம் பெற முயற்சிப்பது தான் விவேகம். இங்கு நாம் காண்பதும் அனுபவிப்பதும் சுகமல்ல. பரப்பிரம்மத்தை அடைவதே சுகம். பகவானையே நினைத்து பக்தி செய்து கொண்டிருந்தால் எங்கும் பரப்பிரம்மத்தையே காணலாம்.

ஆத்மார்த்தமாக பக்தி செய்பவனையே பகவான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். ராதை என்கிற

ஜீவாத்மா, பரமாத்மாவான தம்மிடம் வருவதை எவ்வளவு ஆர்வமாக எதிர்பார்க்கிறார் என்பதை விசேசமாகச் சொல்லியிருக்கிறார்கள். ஸ்ரீகிருஷ்ணன் லதாக்ருகத்தில் இருந்து கொண்டு ராதையின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். இலை அசையும் சப்தம் கேட்கிறது. உடனே ராதைதான் வருகிறாளோ என்று தலை நிமிர்ந்து பார்க்கிறார். ஒரு பட்சியின் சிறகு கீழே விழும் சப்தம் கேட்கிறது. உடனே ராதைதான் வருகிறாளோ என்று அவள் வரும் வழியை நோக்கிப் பார்க்கிறார். பக்தர்கள் தம்மிடம் வந்து சேருவதை பகவான் வெகு ஆவலுடன் எதிர்பார்க்கிறார்.

நாம் பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டு சென்றால் அவனை அடையலாம். அவன் அடைக்கலம் கொடுக்கிறான். நாம் வேறு மார்க்கத்தில் சென்றால் அது எங்கேயோ கொண்டு விடும். பிறகு சுற்றிச் சுற்றி வர வேண்டியதுதான். அதுபோல சரியான மார்க்கத்தில் வாழ்க்கையை நடத்திக் கொண்டு போனால் அவனை அடைந்து விடலாம். இல்லையேல் ஜனன மரண சக்கரத்தில் சுற்றிச் சுற்றி வரவேண்டியதுதான். ஜாக்கிரதை!

●

ஜீவாத்மா, பரமாத்மாவான தம்மிடம் வருவதை எவ்வளவு ஆர்வமாக எதிர்பார்க்கிறார் என்பதை விசேசமாகச் சொல்லியிருக்கிறார்கள். ஸ்ரீகிருஷ்ணன் லதாக்ருகத்தில் இருந்து கொண்டு ராதையின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். இலை அசையும் சப்தம் கேட்கிறது. உடனே ராதைதான் வருகிறாளோ என்று தலை நிமிர்ந்து பார்க்கிறார். ஒரு பட்சியின் சிறகு கீழே விழும் சப்தம் கேட்கிறது. உடனே ராதைதான் வருகிறாளோ என்று அவள் வரும் வழியை நோக்கிப் பார்க்கிறார். பக்தர்கள் தம்மிடம் வந்து சேருவதை பகவான் வெகு ஆவலுடன் எதிர்பார்க்கிறார்.

நாம் பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டு சென்றால் அவனை அடையலாம். அவன் அடைக்கலம் கொடுக்கிறான். நாம் வேறு மார்க்கத்தில் சென்றால் அது எங்கேயோ கொண்டு விடும். பிறகு சுற்றிச் சுற்றி வர வேண்டியதுதான். அதுபோல சரியான மார்க்கத்தில் வாழ்க்கையை நடத்திக் கொண்டு போனால் அவனை அடைந்து விடலாம். இல்லையேல் ஜனன மரண சக்கரத்தில் சுற்றிச் சுற்றி வரவேண்டியதுதான். ஜாக்கிரதை!

●